"நான் ஒரு குடும்பப்பெண்
எனவே நான் உடுத்தும் உடைகள் குடும்பப் பாங்காக இருக்க வேண்டும்."



உங்கள் அந்தஸ்தே தனி
அதற்கேற்ற துணி

ம:பத்லால்
:பேப்ரிக்ஸ்



MF-18 TAM

ம:பத்லால் இண்டஸ்ட்ரீஸ் ம:பத்லால் :பைன்



# இசையில் பக்திப் பிரவாகம்

இந்த வைகுண்ட ஏகாதசி (18–12–80) அன்று ஓர் அற்புதம் நிகழ்கிறது. நமது பெரு மதிப்புக்குரிய பதினொரு துறவிகள் பல்வேறு நகரங்களில் ஒரே காரியத்தை மிகுந்த மன நிறைவோடு செய்கிறார்கள். எல்லோருக்கும் அளப்பரிய ஆனந்தத்தைத் தரும் அந்த ஒரு காரியம் என்னவெனில் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி வழங்கும் வேங்கடேசுவர பஞ்ச ரத்னமாலா எல். பி. இசைத் தட்டுக்களில் நான்காவது பாகத்தை வெளியிடுவதுதான்.

புதுதில்லியில் சுவாமி ரங்கநாதாநந்தா; கல்கத்தாவில் சுவாமி அனன்யாநந்தா; பம்பாயில் சுவாமி சின்மயாநந்தா; சென்னையில் கௌடியா மடத்தின் தலைவர் திரிதண்டி சுவாமிகள்; ஹைதராபாத்தில் புஷ்பகிரி மடத்தின் பீடாதிபதி வித்யா நரசிம்ம பாரதி; பெங்களூரில் உடுப்பி பெஜாவர் மடத்தின் தலைவர் விசுவேசுவர தீர்த்த சுவாமிகள்; ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீ ஆண்டவன் சுவாமிகள்; குருவாயூரில் ஸ்ரீ அன்றம் மாதவன் நம்பூதிரி; வாரணசியில் ஸ்ரீ ஷரத் வல்லப பேட்டிஜி மஹராஜ்; பூரி ஜகந்நாத்தில் ஸ்ரீ ராம மந்திரைச் சேர்ந்த வைத்திநாத பிரம்மச்சாரி; துவாரகையில் காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள்.

பதினொரு மகான்கள் வெளியிடும் இந்த இசைத்தட்டில் சங்கரர், ராமானுஜர், மத்வர் ஆகிய நமது பரமாச்சாரியர்கள் இயற்றிய ஸ்தோத்திரங்கள் இடம் பெறுகின்றன. சிருங்கேரி பெரியவாள் ஸ்ரீ நரசிம்ம பாரதி இயற்றிய ஒரு ஸ்தோத்திரத்துடன் ஆரம்பமாகும் இசைத்தட்டு சைதன்யர் இயற்றிய ஒரு துதிப் பாடலுடன் முடிகிறது. காஞ்சிப் பெரியவாள் இயற்றிய துர்க்கா பஞ்ச ரத்னமும் எம். எஸ்.ஸின் குரலில் ஒலித்து இதயத்தை நெகிழ்விக்கிறது.

வேங்கடேசுவர பஞ்சரத்ன மாலா இசைத் தட்டுக்களை நமது தேசத்தின் ஐந்து புனித நதிகளுக்கு அர்ப்பணமெனில் அவற்றில் இந்த நான்காவது பாகம்: கங்கை.

# Kalki Shopping Page









## கல்கி

சந்தா விவரம்

★

| | ஓராண்டு | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 46 | ரூ. 23 |
| இலங்கை (இந்திய நாணயப்படி) | ரூ. 64 | ரூ. 32 |
| இதர வெளிநாடுகள் | ரூ. 100 | ரூ. 50 |

**மானேஜர்**

கல்கி, சென்னை - 600 032


அஸ்ஸாம் பிரச்னை
யானை கட்டுக்குள் அடங்கிடும்!
இ. காங்கிரஸ் அமைச்சரவை
ஜெயில் சிங்


திட்டக் கமிஷன்
ரூ 3100 கோடி
ஆந்திராவின்


தமிழ் நாடு ஹோட்டல்
இந்தாங்க, சூடா இட்லி!

# மீ. ப. சோமு

**ச**ரியான நேரத்தில் தகுதி வாய்ந்த ஒருவரைப் பொருத்தமான விருது அளித்துக் கௌரவிக்கிறது தமிழிசைச் சங்கம்.

தம்முடன் சேர்ந்து கூட்டாசிரியராகப் பணியாற்றி, இரு நூல்களை உருவாக்க ராஜாஜியால் தேர்ந்தெடுக்கப்பட்ட நபர் யார்? திருவாளர் சோமு! டி. கே. சியின் அணுக்கச் சீடர்களில் இன்றைக்குச் சிறப்பிடம் பெற்றுத் திகழ்பவர் யார்? மகராஜன் சோமு! கல்கி அவர்களின் மறைவுக்குப் பின்னால், ராஜாஜி, சதாசிவம் ஆகியோரின் பூரண நம்பிக்கைக்குப் பாத்திரராகி, இந்தப் பத்திரிகையின் ஆசிரியர் பொறுப்பேற்று அதன் கௌரவமும் பிராபல்யமும் ஒருங்கே பெருக உழைத்தவர் யார்? மீ. ப. சோமு!

சில பேரிடம் பேச ஆரம்பித்தால் 'எப்போது தப்பி ஓடுவோம்' என்று தோன்றிவிடும். மாறாக உரையாடலையே ஒரு கலையாக வளர்த்த சேதுப்பிள்ளை, மு. வரதராஜனார் போன்றோருடன் வைத்து எண்ணத் தக்கவர் சோமு. ராஜாஜி மாலையில் ''டிரைவ்'' கிளம்பினார் என்றால் கார், சோமு வீட்டுக்குப் போய்த் தான் நிற்கும். திருமதி பர்சை சோமசுந்தரம் தயாரித்தளிக்கும் ஒற்றை இட்டிலி ஒன்றே ஒன்றைச் சுவைத்து உண்டு விட்டு, மணிக்கணக்கில் பேசிக் கொண்டிருப்பார் சோமுவுடன். கல்கி — டி. கே. சிக்குப் பிறகு இலக்கிய ரீதியிலும் தத்துவார்த்த ரீதியிலும் பேசி மகிழ ராஜாஜிக்குக் கிடைத்தவர்கள் இருவர், ஆங்கிலத்துக்கு காஸா; தமிழுக்கு சோமு.

அகில இந்திய ரேடியோவில் தமது நீண்ட காலப் பணியைச் சிறப்பாக நடத்தி முடித்து ஓய்வு பெறும் தருவாயில் உள்ளார் சோமு. எதிர்காலத்தில் வேறு பல பணிகள் அவருக்குக் காத்திருக்கலாம் என்றாலும் புகழ் கிரீடம் சூட்டிக் கௌரவிப்பதற்குப் பொருத்தமான காலகட்டம்தான் இது.

இசைப் பேரறிஞர் என்ற விருது வழங்கப்பட சகல விதங்களிலும் தகுதி பெற்றவர் சோமு. கோவில் ஸ்தானிகர்கள் என்ற தேவார ஓதுவார்கள் மரபில் தோன்றியவர். இசை ஞானம் நிரம்பி அதனை இறைவனுக்கே அர்ப்பணித்த பரம்பரையில் உதித்தவர். இளமைக் காலத்தில் வாய்ப்பாட்டோடு வீணையும் சாரங்கியும் பயின்றவர். பிற்காலத்தில் டி. கே. சி. அவர்கள் தொடர்பால் இலக்கியத்தில் இவருக்கு ஈடுபாடு ஏற்பட்டது. அது இலக்கிய உலகுக்கு லாபமாயினும் இசை உலகுக்கு நஷ்டமாகி விடவில்லை. இசையைப் பற்றிய ஆராய்ச்சிகளில் இறங்கினார். ரேடியோவில் இசை நிகழ்ச்சிகள் பலவற்றை அற்புதமாகத் தொகுத்தளித்தார். இவரது சாகித்தியங்களே பல ஒலிபரப்பாயின.

அமரர் கல்கி கண்டெடுத்த இந்த எழுத்தாளர், கவிதைகளுக்குப் பரிசு, சிறுகதைகளுக்குப் பரிசு, பயண இலக்கியத்துக்குப் பரிசு என்று பல பரிசுகளைக் தவறவிட்டதில்லை. இங்கிலாந்து சென்று ஒலிபரப்புக் கலையையும் மற்ற [illegible] கலைகளையும் பயின்றவர். தமிழ்ப் புலமையுடன் ஆங்கிலக் கல்வியும், சமஸ்கிருதம், ஹிந்தி ஆகியவற்றில் தேர்ச்சியும் பெற்றவர். நடனம், சிற்பம், சங்கீதம், ஓவியம் ஆகிய பல்கலைகளில் ஆராய்ச்சி உடையவர்.

அடக்கம் மிக்க சோமு கோபத்துடன் படபடக்கும் தருணம் ஒன்று உண்டென்றால் அது, இலக்கியத்திலும் கலையிலும் ஜாதி, மொழி பிரச்னைகளைக் கிளப்பிக் குறுகிய கண்ணோட்டத்துடன் யாரேனும் பேசும் போது தான். 'இறையுணர்வு இன்றி தமிழ் ஏது?' என்பார் இந்தத் தமிழ்ப் பித்தர்.

பல்கலை வித்தகர் (தருமை ஆதீனம் வழங்கியது) முத்தமிழ்ச் செல்வர் (யாழ்ப்பாணம் ஆதீனம் சூட்டியது) ஆகியவற்றோடு இசைப் பேரறிஞர் பட்டத்தையும் இணைத்துக் கொள்கிற சோமு அவர்களை வாழ்த்தும் போதே தமிழ் இசைச் சங்கத்தையும் பாராட்டுகிறோம்.




1980 டிசம்பர் 21

ரௌத்திரி மார்கழி 6

மலர் 39 : இதழ் : 21


# கல்கி



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

# புத்தாண்டு மணக்க
# நரசுஸ்
# காபி அளிக்கும் வெகுமதிகள்!






- 12 கிலோ நரசுஸ் காபிக்கு எவர்சில்வர் காபி டபரா செட்.
- 6 கிலோ நரசுஸ் காபிக்கு எவர்சில்வர் காபி டம்ளர்.
- 2 கிலோ நரசுஸ் காபிக்கு வண்ணத் துணிப்பை.
- 750 கிராம் நரசுஸ் காபிக்கு பெரிய எவர்சில்வர் ஸ்பூன்.
- 500 கிராம் நரசுஸ் காபிக்கு சிறிய எவர்சில்வர் ஸ்பூன்.

மொத்தமாகவோ, சில்லரையாகவோ வாங்கும் நரசுஸ் காபியுடன் கிடைக்கும் வெகுமதிக் கூப்பன்களைப் பெற்று வெகுமதிகளைப் பெறுங்கள்.

22-12-80 முதல் 21-2-81 வரை முடியும் விற்பனைக்கே இப்பரிசுகள் உரியவை.

**ஜீவனுள்ள ஒரே காபி!**

## நரசுஸ்

**"தெர்மலோ" காபி!**



**நரசுஸ் காபி கம்பெனி**
சேலம் 636 007.
கிளைகள்: தமிழ்நாடெங்கும்.

ADWAVE/NCC/1528

தமிழறிஞரும் இசையறிஞரும் இலக்கிய கர்த்தாவுமான மீ. ப. சோமசுந்தரம் (சோமு) தமிழ் இசைச் சங்கத்தாலும், பிரபல குணசித்திர நடிகர் எஸ்.வி. சஹஸ்ர நாமம் ஃபைன் ஆர்ட்ஸ் சொஸைட்டியாலும், வயலின் மேதை டி. என். கிருஷ்ணன் மியூஸிக் அகாடமியாலும் இவ்வாண்டு இசை விழாக்களின்போது கௌரவிக்கப்பட இருக்கிறார்கள். இவர்கள் மூன்று பேரும் சந்தித்து அளவளாவிய போது:



# ரசிப்பதற்கே சங்கீதம்!

சோமு: சமீப காலத்தில் கர்நாடக சங்கீதக் கச்சேரிகளுக்கு வரும் ரசிகர்களின் எண்ணிக்கை குறைந்துள்ளதாகப் பரவலான அபிப்பிராயம். இது சம்பந்தமாக உங்கள் கருத்து என்ன? கூறுங்களேன்.

கிருஷ்ணன்: பாடுகிறவர் பாடினால், வாசிப்பவர் வாசித்தால் கூட்டம் வரத்தான் செய்கிறது. அதுவும் சென்னையை விட வெளியூர்களில் அதிகமான கூட்டம். ஆனால் பொதுவாக முன்னைக்கு இப்போ கூட்டம் குறைவாக வருவதை ஒப்புக்கொண்டுதான் ஆக வேண்டும்.

சகஸ்ரநாமம்: அதற்கான காரணம் என்னவாக இருந்தாலும், மறுக்க முடியாத உண்மைதான் இந்த நிலே.

சோமு: மெல்லிசை, திரைப்பட இசை இவற்றின்மேல் உள்ள மோகம் தரமான சாஸ்திரீய சங்கீதத்தினிடம் இல்லே. 'கனம்' அதிகமான சங்கீதத்தை விட மக்களில் பெரும்பாலோர் 'கனம்' குறைவான சங்கீதத்தில்தான் அதிகம் நாட்டம் செலுத்துகின்றனர். இந்த நாளில் மக்கள்தாம் மன்னர்கள். அவர்களது தேவைக்கேற்ப செயல்படுவது அவசியம் இல்லையா? இப்போது நம் முன் இருக்கும் பிரச்சினை ஒடுங்கி வரும் கர்நாடக இசைக்குப் புத்துயிர் கொடுத்துப் பழைய பெருமையை மீட்க என்னென்ன செய்யலாம் என்று கண்டு பிடித்துச் செயலாற்றுவதுதான். மக்கள் ரசனையை மாற்றி உயர்வான கர்நாடக சங்கீதத்தை ரசிக்கும்படி அவர்களை உயர்த்துவதா? அல்லது நாம் சற்று இறங்கிப் போய் அவர்களுடைய ரசனைக்கேற்ப தரம் குறையாத விதத்தில் நம்மை மாற்றிக் கொள்வதா?

கிருஷ்ணன்: சமீபத்தில் டெல்லியில் 'சங்கீதத்தின் எதிர்காலம்' என்ற தலைப்பில் இந்தியாவின் பல மாநிலப் பிரதிநிதிகளும் பங்கேற்ற ஒரு கருத்தரங்கு நடைபெற்றது. அதில் வெளியான கருத்துப்படி எல்லா மாநிலங்களிலுமே இந்த நிலேதான்! தமிழ்நாடு எவ்வளவோ தேவலாம் என்று புரிந்தது. இம்மாதிரி சாஸ்திரீய இசைக்கு ஆதரவு குறைந்து வருவது கவலைப்படக்கூடிய விஷயம்தான்.

சோமு: ரசிகர்களின் பொறுமையைச் சோதிக்காத வண்ணம் இரண்டு மணி இரண்டரை மணி அளவோடு நிறுத்தி, சற்று கவர்ச்சியாகவும் அதே சமயம் தரம் குறையாமலும் கச்சேரி செய்யலாம் அல்லவா?

சகஸ்ரநாமம்: நீங்கள் சொல்வது சரிதான். தற்போது நாம் இருப்பது துரித யுகம். கால மாறுபாட்டுக்கு ஏற்பச் சில மாற்றங்களைச் செய்வதுதான் நல்லது.

சோமு: கால மாறுபாடா? மன மாறுபாடா?

சகஸ்ரநாமம்: கால மாறுபாட்டுக்கேற்ப மன மாறுபாடும் ரசிகர்களிடையே ஏற்பட்டு உள்ளது. அதனால்தான் இந்த நிலே.

கிருஷ்ணன்: சமீபத்தில் டெல்லியிலே ஒரு வித்வான் சில மாற்றங்களுடன் கவர்ச்சியாக ஒரு கர்நாடக இசைக் கச்சேரி செய்தார். ரசிக்கும்படியாகவே இருந்தது. அம்மாதிரி ஏதாவது முயற்சி செய்யலாம்.

சஹஸ்ரநாமம்: கல்வி முறையில் தற்போது பல மாற்றங்கள் செய்திருக்கிற மாதிரி கர்நாடக சங்கீதத்தைக் கற்பிக்கும் முறையிலும் சில மாற்றங்கள் செய்யணும். கற்பவர்களுக்கு சுலபமாக இருக்கும். ஆர்வமும் அதிகம் இருக்கும்.

சோமு: சங்கீதப் பாட முறைகள் மாறணும், கச்சேரிகளின் நேரத்தைக் குறைக்கணும்னு வந்த யோசனைகளைத் தவிர இப் பிரச்னைக்கு வேறு என்ன வழிமுறைகளைக் கடைப்பிடிக்கலாம்?

சஹஸ்ரநாமம்: புதுசா பாடல்கள் போடணும்.

சோமு: ஆமாம். பழைய உருப்படிகளையே திரும்பத் திரும்பப் பாட வேண்டியிருக்கு.

கிருஷ்ணன்: கேட்டுக் கேட்டுப் பழகின பாடல்களை மறுபடியும் கேட்பதிலே ஒரு ரசனை இருக்கு. அதுவும் ராகத்தின் ஜீவனை உணர்த்துகின்ற பாவ பூர்வமான பாடல்கள் அமரத்வம் பெற்றவைதான். ஆனால் ஒவ்வொரு கச்சேரியிலும் புதிய பாடல்களும் பாடப்படத்தான் வேண்டும். இதிலே ஒரு பிரச்னை இருக்கு. புதிய பாடல்களைச் சரியாக அப்யசிக்காமல் லைட் மியூஸிக்லே செய்யற மாதிரி பேப்பரைப் பார்த்துண்டே மேடையிலே பாடற நிலே இருக்கே... ரொம்பத் தப்பு இல்

லையா இது? நிறைய வித்வான்கள் மேடையிலே கச்சேரி பண்ணும், மேடையிலே சாதகம் பண்ற... நிலைமை இப்படி இருக்கும்போது எப்படிக் கூட்டம் குறையாமல் இருக்கும்? தற்போது பல வித்வான்களிடம் உள்ள முக்கிய குறை போதுமான பயிற்சியும் இல்லே, உழைப்பும் இல்லே.

சோமு: வடநாட்டு வித்வான்கள் பலரைத்தான் உங்களுக்குத் தெரியுமே. அவர்கள் எல்லாம் எப்படி உழைத்துப் பாடுபடுகிறார்கள்! அதிலும் குரல் பயிற்சிக்கு எவ்வளவு முக்கியத்துவம் தருகிறார்கள்!

கிருஷ்ணன்: இன்னொன்றையும் கவனிக்கணும்; ராக ஆலாபனையின்போதும் சுவரப் பிரஸ்தாரங்களின்போதும் பக்க வாத்தியக்காரர்களின் பலத்தைப் பெரிதும் நம்பிப் பாடிவிடுகிறார்கள். இதனால் வாய்ப்பாட்டு வித்வானுக்குத் தமது தனிப்பட்ட திறமையை வெளிப்படுத்தவோ, வளர்த்துக்கொள்ளவோ வாய்ப்புக் குறைவாக இருக்கிறது.

சோமு: ''கிரிடிக்''குகளிடமும் எனக்கு ஒரு குறை உண்டு. நல்ல குரல் இனிமை உள்ள ஒருவர் சிறப்பாகப் பாடினால் 'நல்ல குரல் இருக்கு' என்று இலேசாகக் கூறிவிடுகின்றனர். குரல் இருப்பதால் மட்டுமே அவர் நன்றாகப் பாடுவது போலவும் அவருக்கு ''வித்வத்'' குறைவு என்பது போலவும் பேசுகின்றனர். சொல்லப் போனால் நல்ல குரல் இல்லாமல் இருப்பதே Classical என்று முத்திரை குத்தும் நிலே.

கிருஷ்ணன்: ரொம்பத் தவறான கருத்து இது. இதற்கு மறுபுறமாகக் குரல் வளம் சரியாக இல்லாமல் இருந்தும் நல்ல உழைப்பாலும், பயிற்சியாலும் வித்வத்தாலும் ரசிகர்களைக் கவர்கின்ற வித்வான்களும் உண்டு. நல்ல 'ஸவுண்ட்' வர இவர்கள் எவ்வளவு அசுர சாதகம் செய்திருக்க வேண்டும் என்று யாரும் நினைப்பதில்லே.

சஹஸ்ரநாமம்: பண் ஆராய்ச்சி சம்பந்தமாகச் சொல்லுங்களேன்.

சோமு: பண்கள் என்றால் இன்று நாம் ராகங்கள் என்று சொல்கிற இசை வடிவத்துக்குப் பழைய தமிழ்ப் பெயர். இன்று பலர் தேவார திவ்வியப் பிரபந்தங்களில் உள்ள இசை வடிவம்தான் பண் என்று நினைக்கிறார்கள். தேவார திவ்வியப் பிரபந்தகாலங்களுக்கு முன்பே தமிழ் நாட்டில் வாய்ப் பாட்டிலும் இசைக் கருவிகளிலும் எத்தனையோ பல ராகங்களும் வேறுபல இசை வடிவங்களும் வழக்கத்தில் இருந்து வந்தன. இவற்றில் தாய் ராகங்களைப் பண்கள் என்றும் சேய் ராகங்களை திறங்கள் என்றும் நம் முன்னோர்கள் அழைத்து வந்திருக்கிறார்கள். இன்று நாம் உருப்படிகள் என்று சொல்கிற பாடல்களை அவர்கள் உருக்கள் என்று அழைத்ததாக தொல்காப்பியம் போன்ற நூல்களிலும் குறிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே தமிழ் நாட்டு இசை என்றால் தமிழகத்தின் கோயில்களிலும் பொது மன்றங்களிலும் அரச சபைகளிலும் வாய்ப் பாட்டின் மூலமும் இசைக் கருவிகள் மூலமும் நாடக நடனங்கள் மூலமும் வளர்ந்து வந்த எல்லா இசை வடிவங்களும் சேர்ந்த சங்கீதமே ஆகும்.

கிருஷ்ணன்: அடுத்ததாக நாடகத் துறை சம்பந்தமாக நீங்க கூறணும்.

சஹஸ்ரநாமம்: முன்பு நான்கு நாலரை மணி நேரத்துக்கு அற்புதமான பல பாட்டுக்களோடு நாடகம் நடக்கும். சங்கீதமும் சிறப்பா இருக்கும். தற்போது சங்கீதமே இல்லே.

கிருஷ்ணன்: சிலருடைய சங்கீதத்திலேயே சங்கீதம் இல்லையே! (எல்லோரும் சிரிக்கிறார்கள்)

சஹஸ்ரநாமம்: நல்ல நாடகங்கள் சில அரங்கேறினாலும் பொதுவாகப்பார்க்கும்போது ரொம்ப 'லைட் காமடியா' பல வித பாதிப்புக்களினாலே விரசம் நிறைந்த வசனங்களுடன் தற்போதைய தமிழ் நாடகம் அமைதி குறைஞ்சு, ஆர்ப்பாட்டமாகி உள்ளது.

கிருஷ்ணன்: நீங்க சொல்றது ரொம்பச் சரி. நீங்க போட்ட 'வடிவேலு வாத்தியார்' மிகவும் நல்ல நாடகம்... நான் ரொம்ப ரசித்துப் பார்த்ததுண்டு. நாடகத் துறைக்கு நீங்க செய்திருக்கிற சேவை மறக்க முடியாதது. தற்போது தமிழ் நாடக உலகின் நிலே வருந்தத் தக்கது தான்.

சோமு: வருத்தம் எதனால் ஏற்படுகிறதென்றால் மக்கள் விரும்புகிறார்கள் என்று சொல்லிக்கொண்டு தரக் குறைவான படைப்புக்களைக் கலைஞர்கள் ஆக்க வேண்டும் என்ற தவறான கருத்துத்தான். காலம் சென்ற கல்கி கிருஷ்ணமூர்த்தி அவர்கள் ஒப்பற்ற ஜனரஞ்சக எழுத்தாளர். ஆனால் அதே சமயம் அவருடைய எந்த எழுத்திலும் தரக் குறைவே இருந்ததில்லே. வல்லமை படைத்த கலைஞர்களின் சிறப்பு இதுதான். எழுத்திலாகட்டும், சங்கீதத்திலாகட்டும், நாடகத்திலாகட்டும் தரத்தையும் ஜனரஞ்சகத்தையும் இணைக்கிற கலைஞன்தான் மேதை.

உரையாடல் தொகுப்பு: நாயகன்

மேலட்டை வண்ணப்படம்: என். பிரபாகர்

# இந்திராவுக்கு வீணை கற்றுக்கொள்ள முடியவில்லை



அசோகமித்திரன்

''கோபு, இன்னிக்கு அஞ்சு மணிக்கு சார் வரூராம்.''

''உம்.''

''எங்கேயும் போயிடாதே. வாரம் ஒரு கிளாஸ்தான். உன்னோட இன்னும் யார் யாரோ பெரிய பெரியவாள்ளாம் கிளாஸ்லே சேர்ரு. இதே தெருவிலே நாலு வீடு தள்ளி இஞ்சினீயர் வீட்டிலே.''

''பெரியவாள்ளாம் இருக்கறப்போ நான் எதுக்கும்மா?''

''ஏன்னு நீயும் ரெண்டு பாட்டுப் பாடணும்னுதான். பாட்டாக் கத்துக்கலென்னாலும் லகுவா ரெண்டு பஜனைப் பாட்டாவது கத்துக்கலாம், இல்லையா?''

''எனக்கு இப்படிக் கூட்டமாச் சேர்ந்து ஒண்ணாக் கத்தறதெல்லாம் பிடிக்கவேயில்லே. பஜனை கத்துண்டு நான் தினம் தெருவிலே பஜனை பண்ணிண்டா போப்போறேன்?''

''வீட்டுலே சங்கீதம்னு ஏதாவது கொஞ்சமாவது இருக்கணும்.''

''பாச்சாவைக் கத்துக்கச் சொல்லேன்.''

''அவனுக்குக் குரலே இல்லே. அதோட அவன் நாலு மனுஷா நடுவிலே ரொம்பக் கூச்சப்படறான்.''

''நான் கராத்தே கிளாஸ்லே சேர்றேன்னு கெஞ்சிக் கேட்டேன். அதுக்கு முடியாதுன்னுட்டே.''

''காச்சு மூச்சுன்னு கத்திண்டு கையைக் காலை உதறது நம்பளுக்குச் சரிப்பட்டு வராதுன்னுதான் சொன்னேன். கராத்தே கத்துண்டு மட்டும் என்ன, நீ தினம் சண்டை போட்டுண்டிருக்கப் போறியா?''

''என்னை யொத்த பையன்கள்ளாம் கராத்தேதான் கத்துக்கறா. பஜனை இல்லே. நான் பஜனைக் கிளாஸ்லே சேர மாட்டேன்.''

கோபு தீர்மானமாகச் சொல்லிவிட்டு வெளியே போய்விட்டான். இந்திரா கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

ஒரு காலத்தில் அவள் வீணை கிளாஸில் சேர எவ்வளவோ ஆசைப்பட்டாள். எவ்வளவோ கஷ்டங்களுக்கிடையில் அவளுடைய அம்மா மாதம் பத்து ரூபாய் சமாளித்துக் தந்துவிடுகிறேன் என்று சொன்னாள். ஆனால் அப்பாதான் நிர்தாட்சண்யமாகப்-பாட்டும் வேண்டாம், கூத்தும் வேண்டாம் என்று தடுத்து விட்டார். அந்தத் துக்கம் தீர இந்திரா நாள் கணக்கில் இரவு படுக்கும் போது அம்மாவைக் கட்டிக் கொண்டு அழுதிருக்கிறாள்.

துக்கம் பாட்டுக் கற்றுக்கொள்ள முடியவில்லை என்ற ஒரு காரணத்துக்காக மட்டுமல்ல. வீணை கற்றுக்கொள்ள வேண்டும் என்ற எண்ணம் அவள் மனசெல்லாம் வியாபித்திருந்த காலத்தில்தான் யதேச்சையாக நடப்பது போல ஒரு மிகப் பெரிய விஷயம் நடந்துவிட்டது. அவளுடைய இரு அண்ணன்களுக்குச் சங்கரன் என்ற ஒரு புது சிநேகிதன் கிடைத்தான்.

இந்திராவுக்கு ரங்கன், வரது இரண்டு பேரைப் பற்றியும் வருத்தம்தான். அவர்கள் குடியிருந்த சிறு இடத்தில் சிறிதே விசாலமாக இருந்த ஒரே அறையில் வீட்டுக்காரர்கள் விட்டுப் போயிருந்த ஊஞ்சலில் வேகமாக ஆடிக்கொண்டு இரண்டு அண்ணன்களும் உரக்க விவாதம் நடத்துவார்கள். எதைப் பற்றி? யார் அதிகம் பருமன் — பத்மினியா சாவித்திரியா? பைத்தியம் போல நடித்து நடனமாடுவதில் சிவாஜி மேலா, எம். ஜி. ஆர். மேலா? தங்கவேலுவுக்கு சரியான ஜோடி முத்துலட்சுமியா எம். சரோஜாவா? காலேஜுக்கெல்லாம் சென்று படித்துவிட்டு ஒருவன் ரயில்வேயிலும் இன்னொருவன் கே.கே. கம்பெனியிலும் வேலை செய்பவர்களுக்குப் பேசிக்கொள்ள வேறு விஷயமே கிடைக்காதா? வீட்டில் இன்னும் இரண்டு தங்கைகளும் ஒரு தம்பியும் படித்து ஒழுங்காகப் பரீட்சைகள் தேற வேண்டுமே, காலையிலும் மாலையிலும் இப்படியே உரக்க அக்கப்போர் நடத்தி வந்தால் அவர்கள் கதி என்ன என்று தோன்றாதா? பெண்கள்தான் வீட்டிலேயே அடைந்து கிடக்க வேண்டுமென்றால் இந்த இரண்டு தடியர்களும் வெளியே தொலையவே மாட்டேன் என்கிறார்களே?. வீட்டில் பெண்கள் விஷயத்திலெல்லாம் தலையிட்டு ஒருவருக்கும் ஒரு நல்லதும் நடக்க விடாதபடி செய்துவிடுகிறார்களே! இந்த ரங்கன் மட்டும் அன்று அசட்டுத்தனமாகக் குறுக்கிடாமல் இருந்தால் அப்பா அவளை வீணை கற்றுக்கொள்ள அனுமதித்திருப்பார்.

ஊஞ்சலில் மூன்றாவது ஆளாக சங்கரன் வந்து உட்கார ஆரம்பித்து ஒரு மாதம் ஆயிற்று. இவ்வளவு அச்சுப் பிச்சு அண்ணன்களுக்கு இவ்வளவு விஷயம் தெரிந்த ஒருவன் எப்படிச் சிநேகிதன் ஆனான் என்று இந்திராவுக்கு ஆச்சரியம். சிவாஜி தங்கவேலு விஷயங்களைக் கூட சங்கரன் மிக ஆழமானதாகச் செய்து பேசினான். சென்னையில் இருந்து கொண்டு வருடம் ஒரு முறையாவது மியூசியம் சென்று பார்த்து வராமல் இருப்பது பெரிய இழப்பு என்றான். இராமாயணத்து லங்காபுரி இப்போது இருக்கும் இலங்கையாக இருக்க முடியாது என்று காரணங்கள் சொன்னான். எந்த மகா மனிதனுக்கும் ஆதார சக்தியாக ஒரு உருவகம் இருக்கும் என்றும் அது காந்திக்கு இந்திய மக்களாகவும் நேருவுக்கு இந்திய நாடாகவும் இருக்க வேண்டும் என்றான். வீணை ராமச்சந்திரன் அவ்வளவு பெரிய கலைஞர் இல்லையோ என்று சந்தேகப்பட்டான்.

''என்ன நீங்க அவரைப் பத்தி இப்படிச் சொல்லிவிடலாமா? அவர் தெய்வம் மாதிரி வாசிக்கிறார்'' என்று இந்திரா குறுக்கிட்டுச் சொன்னாள். ஒரு வாரம் முன்புதான், கோதண்டராமசாமி கோயில் ஸ்ரீராமநவமி

உற்சவத்தில் அவள் வீணை ராமச்சந்திரன் வீணை வாசிப்பை மெய் மறந்து கேட்டிருந்தாள். அவள் வீணை கற்றுக்கொள்ள வேண்டும் என்ற ஆசை ஏற்பட்டதே அந்தக் கச்சேரியினால்தான்.

சங்கரன் உற்சாகத்தோடு பேசினான். "எனக்கும் அவர் வீணை பிடிக்கும். ஆனா அவர் வீணையை இம்சிக்கிற மாதிரியும் தோணும்."

சொல்லி வைத்தாற்போல் ஒரு வார காலத்தில் வீணை ராமச்சந்திரனின் இன்னொரு இனும் கச்சேரி. சாரதா வித்யாலயாவுக்குப் பின்னால் உள்ள மைதானத்தில்.

இம்முறை சங்கரனால் ரங்கன், வரது கூடக் கச்சேரிக்கு வந்தார்கள். வீணை ராமச்சந்திரன் நன்றாகத்தான் வாசித்தார். ஆனால் ஒரு கணம் வீணை ஒரு கன்றுக்குட்டியாக மாறின மாதிரியும் ராமச்சந்திரன் அதை மீட்டிய விதத்தில் அதன் கழுத்தெல்லாம் ஒரே இரத்தக் களறியாகப் பயங்கரமாகக் காட்சியளித்தது போலவும் இந்திராவுக்குத் தோன்றிற்று. ஒரு கணம்தான். இந்திரா திடீரென்று வயது கூடியவள் போல உணர்ந்தாள்.

இன்னும் வேறொரு கணத்தில் சங்கரன் அவளுடைய வயதை அதிகமாக்கினான். வாசற்படியில் நின்றுகொண்டிருந்த இந்திராவிடம் ஒரு மாலை, "இந்திரா, உங்கிட்டே நான் ஒண்ணு சொல்லணும்" என்றான்.

"என்ன?"

"நீ இல்லாமெ என்னாலே இருக்க முடியாது."

இவ்வளவுதான் இருவரிடையே நடந்தது.

இந்திராவுக்கு ஒரு பெரிய சுமையை அவன் மேல் தூக்கி வைத்தது போலிருந்தது. அத்துடன் அவர்கள் வீட்டுக்குச் சங்கரன் வருவது அவளுடைய அண்ணன்களுக்காக மட்டுமல்ல என்றும் தெரிந்தது.

அதன் பிறகும் ஐந்தாறு நாட்களுக்குச் சங்கரன் அவர்கள் வீட்டுக்கு வந்தான். பிறகு காணவில்லை. அவன் வராததைப் பற்றி வீட்டில் யாருமே பேச்செடுக்காதது இந்திராவுக்கு ஆச்சர்யமாக இருந்தது. நாட்கள் செல்லச் செல்லச் சுமையின் அழுத்தம் குறைய ஆரம்பித்தது. சங்கரன் நினைவு வந்தால் துக்கமாக இருக்கும். சங்கரன் — வீணை— நீ இல்லாமல் நான் இருக்க முடியாது— சங்கரன் — வீணை. எல்லாம் போய் இருபது வருடமாகப் போகிறது. இப்போது அவளுடைய இரண்டு பிள்ளைகளில் மூத்தவனைப் பாட்டுக் கற்றுக் கொள்ளச் சொல்கிறாள். அவன் கராத்தேதான் வேண்டும் என்கிறான். துக்கம் என்பது தொடர்ந்து இருந்து கொண்டே இருந்தாலும் அதற்கான காரணங்கள் மாறிக்கொண்டே வரும் போலிருக்கிறது.

இந்திராவுக்குச் சங்கரனைப் பார்க்க வேண்டும் போலிருந்தது. அவனைப் பற்றி நினைப்பது அவளுக்குத் தவறாகத் தோன்றவில்லை. பாவம் அவன் என்ன செய்தான்? நீயில்லாமல் நான் இருக்க முடியாது என்றான். அப்புறம் எங்கேயோ போய்விட்டான். ரங்கன் பொன் மலையில் இருக்கிறான், வரது பெங்களூருக்குப்



போய்விட்டான். தம்பி சிச்க திண்டுக்கல்லில் வாத்தியார். தங்கை ஒரு முஸ்லிமைக் கல்யாணம் செய்து கொண்டு போய்விட்டாள். அப்பாவும் அம்மாவும் தள்ளாத வயதில் தனியாகக் கிராமத்தில் இருக்கிறார்கள். இப்போது சங்கரன் சென்னையில் இருந்தால் இந்திரா ஒருத்தியைத்தான் பார்க்க முடியும். நீயில்லாமல் நான் இருக்க முடியாது என்று சொல்லிப் போனவனை அவள் ஒருத்தியால் தேடிக் கண்டு பிடிக்க முடியுமா? மியூசியம் போனால் கிடைப்பானோ? வீணைக் கச்சேரிகளுக்குப் போனால் அகப்படுவானோ?

"இந்திரா!"

இந்திராவுக்குத் தூக்கி வாரிப் போட்டது. அவள் எதிரில் சங்கரன்!

"நீயா?... நீங்களா?"

சங்கரன் புன்னகைத்தான்.

"நீங்க.... நீ.... நீங்கள்.... எப்போது? அண்ணா ஒருத்தனும் இங்கே இல்லே..."

"நீ கொஞ்சம் மாறியிருக்கே."

அன்று காலைதான் இந்திரா கண்ணாடியில் தன்னைச் சற்று நிதானமாகவே பார்த்துக் கொண்டிருந்தாள். தலைமயிர் கொட்டி, நரைத்தும் இருந்தது. முகத்தில் சில மடிப்புகள். உடம்பைத் தெரிந்த உருவம் எதற்கும் ஒப்பிட முடியாது.

"நீ அப்படியேதான் இருக்கே."

"உன் பாட்டெல்லாம் எப்படி? உன் வீணை ராமச்சந்திரன் சக்கைப் போடு போடுகிறாரே"

"ஆமாம். என் பாட்டு எப்பவோ நின்னு போச்சு."

"ஒரு காகிதம் பென்சிலே வைச்சுண்டு, இருக்கிற ஸ்வரத்தை எல்லாம் மாற்றி மாற்றிப் போட்டு, எல்லா ராகமும் முன்னாலேந்து இருக்குன்னு சொல்லிடலாம். ஆனா அதுக்கு உருவம் கொடுக்கிறது பாடறதுனாலேதான். உன்னைக்கூட கண் இப்படி இருக்கும் மூக்கு இப்படி இருக்கும்னு அடையாளம் சொல்லலாம். ஆனா உன்னையே நேராக் கொண்டு போய் நிறுத்தினால்தான் அந்த அடையாளமே புரியும்."

"உனக்கு ராமச்சந்திரனைப் பிடிக்காது."

"உனக்கு எவ்வளவு குழந்தைகள்?"

"இரண்டு பிள்ளை. ஒத்தனும் பாட்டுக் கிட்டேயேபோகமாட்டேங்கிறான். உனக்கு?"

"எனக்கா? ஒரே பிள்ளை... நாம சம்பந்தம் பண்ணிக்கக்கூட முடியாது."



இந்திரா பேசாமல் இருந்தாள். பிறகு மெதுவாகச் சொன்னாள், "நான் என்ன செய்ய முடியும்? நீதான் அப்புறம் வரவேயில்லையே?"

"ஆமாம்." சங்கரன் பெருமூச்சு விட்டான். "நான் ஏன் வரலே தெரியுமா?"

"தெரியாது. எங்க வீட்டிலே உன்னைப் பத்திப் பேச்சே வரலே."

"உன் கிட்டே சொன்ன நாலு நாளைக்கப்புறம் ரங்கன் கிட்டே சொன்னேன்."

இந்திராவுக்கு ஒரு மூச்சு தவறியது.

"உங்க அம்மா சம்மதம் இல்லாமே ஒண்ணுமே செய்ய முடியாதுன்னு சொன்னான். உன்னை நான் இழுத்துண்டு ஓடிப் போயிட்டேன்னா உன் அம்மா அப்புறம் உன் மூஞ்சியிலே முழிக்கவே மாட்டான்னு சொன்னான். எனக்கு ஓடிப்போறதிலே இஷ்டம் கிடையாது. உன் அம்மாவுக்கு உன் மேலே எவ்வளவு ஆசைன்னு எனக்குத் தெரியும்."

இந்திரா அம்மாவை நினைத்துக் கொண்டாள் அம்மாவை அவள் எத்தனைமுறை கண்ணீரால் குளிப்பாட்டியிருக்கிறாள்?

"உன் அம்மா கிட்டே சொல்லி எல்லாத்தையும் சரிபண்றேன்னு சொன்னான். அதுவரைக்கும் என்னை வீட்டுப் பக்கமே வராதேன்னு சொன்னான்."

எவ்வளவு விஷயங்கள் நடந்திருக்கின்றன! இந்திராவுக்கு நம்பமுடியவில்லை. ரங்கன் இவ்வளவு அழுத்தக்காரனா?

"அவன் அப்புறம் வான்னு சொல்லவேயில்லே. உனக்கு நான் சொன்னது புரிஞ்ச மாதிரியும் தெரியலே. எவ்வளவோ ஆசையா இருக்கிற அம்மாவையும் பொண்ணையும் ஏன் பிரிக்கணும்னு நான் தூரப் போயிட்டேன்."

சங்கரன் வெளியே போனான். அவன் கதவு தாண்டிய உடனேயே கோபு உள்ளே வந்தான்.

இந்திரா அவசரமாகச் சொன்னாள். "கோபு, ஓடிப்போய் அந்த மாமாவை, அழைச்சிண்டு வா. சீக்கிரம்."

"யாரை அம்மா?"

"அதான். இப்ப வெளியிலே போனாரே அவரைத்தான். சீக்கிரம், சீக்கிரம்."

"யாரும் போகலையேம்மா!"

"போடா, போய்த் தெருவிலே பாரு. பத்தடிகூடப் போயிருக்க மாட்டார். இருபது வருஷம் கழிச்சு அவரைப் பார்க்கிறேன், ஒரு தம்ளர் காப்பி கூடத் தரலே. போ, போ!"

கோபு வெளியே ஓடினான். தெருவிலே அவனுக்குப்புதிதாக யாரும் தென்படவில்லை. எல்லாம் வழக்கமானவர்கள்தான். வீடு சென்று அம்மாவிடம், "யாரும் இல்லையேம்மா. நீ யாரைச் சொன்னே? யாரும் கிடைக்கலியே." என்றான்.

"அவன் போயிட்டான். அவன் போயிட்டான்" என்று இந்திரா சொன்னாள்.

"நீ யாரைச் சொல்றே?"

"சங்கரன்."

கோபு உதட்டைப் பிதுக்கினான். அவன் சங்கரன் என்றாலும் சர்தார் சிங் என்றாலும் அவனுக்கு ஒன்றுதான்.

ஆனால் சங்கரன் போய்ப் பல ஆண்டுகள் ஆகின்றன என்று இந்திராவுக்குத் தெரியாது!

# வேதவல்லி — இசையில் தேறின வல்லி

ஏழு வயதில் மன்னார்குடியில் சங்கீத கலாநிதி மதுரை ஸ்ரீரங்கம் அய்யங்காரிடம் இசை பயிலத் துவங்கினார். ("அவரை எழுப்பி, பல் தேய்க்க வைத்துப் பாடம் சொல்லிக் கொடுத்து விட்டுப் போவார். ஒரு நாள் ஊஞ்சலில் உட்கார்ந்து, 'தாயே யசோதா' பாடிக் கொண்டிருந்தேன். வாசலில் போகிற போது அதைக் கேட்டுவிட்டு, அவராகவே முன் வந்து சொல்லிக் கொடுக்கத் துவங்கினார்!")

சுமார் இருபது வருடங்களுக்கு மேலாக, சங்கீத கலாநிதி முடிகொண்டான் ஸ்ரீ வெங்கட்ராம அய்யரிடம் ஆத்மார்த்த சிஷ்யையாகப் பயின்றிருக்கிறார்.

'திருப்பாவை தவிர, வேறு தமிழ்ப் பாசுரங்களுக்கோ, பாடல்களுக்கோ இசையமைத்துப் பாடியதுண்டா?' என்று கேட்கிறோம்.

"வேதாந்த தேசிகருடைய ஹஸ்தகிரி மகாத்மியம், நவமணி மாலை, திருச்சின்ன மாலை ஆகியவற்றுக்கும் இசையமைத்துப் பாடியிருக்கிறேன். கவி குஞ்சர பாரதியின் சூர சம்ஹாரக் கீர்த்தனைகளைப் புராதன மெட்டுக்களோடு பாடியிருக்கிறேன்" என்கிறார் வேதவல்லி.

வீணை தனம்மாள் பாணியில் பதம்—ஜாவளி பாட, மத்திய சங்கீத நாடக அகாடமி ஃபெல்லோஷிப் பெற்று, ஸ்ரீமதி முக்தாவிடம் தனிப் பயிற்சி பெற்றிருக்கிறார். மியூசிக் அகாடமி 1975ல் இவருக்கு முத்துசாமி தீட்சிதரின் கிருதிகளைக் கற்றுக்கொள்ள வென்றே ஸ்காலர்ஷிப் வழங்கியிருக்கிறது.

பெங்களூர், பரோடா, சூரத், ஆமதாபாத், பம்பாய், கல்கத்தா, புதுதில்லி ஆகிய இடங்களில் இவர் நிகழ்த்திய கச்சேரிகளின் அதி உயர்வான விமர்சனங்களைப் படிக்கும் பொழுது நமக்குப் பிரமிப்புத் தட்டுகிறது. ராகங்களைப் பற்றிய இவரது ஆராய்ச்சிக் கட்டுரைகளும், லெக்சர் டெமான்ஸ்ட்ரேஷன்கள் என்கிற செயல் விளக்கங்களும், வானொலிக்கான தனிப்பட்ட இசை நிகழ்ச்சிகளும் இவர் பாடுவதோடு நின்றுவிடுவதில்லை என்று தெரிவிக்கின்றன.

"முன்பு மியூசிக் அகாடமி இசைப் பயிற்சிக் கல்லூரியில் பணியாற்றி, இப்போது கர்நாடக இசைக் கல்லூரியில் பணியாற்றி வருகிறீர்கள். உங்கள் மாணவர் அல்லது மாணவிகள் எதிர் காலத்தில் பிரகாசமாய்த் திகழும் வாய்ப்பு அவர்களுக்கு இருக்கிறது என்று நீங்கள் கருதுகிறீர்களா?"

"நிச்சயமாய் — சில மாணவ மாணவிகள் உற்சாகமாகப் பங்கெடுத்துக் கொள்கிறார்கள். என் மாணவி நான் பணியாற்றிய மியூசிக் அகாடமி இசைக் கல்லூரியில் தற்போது ஆசிரியையாகப் பணியாற்றுகிறாள்!"

"கர்நாடக இசைக்கு இப்போது வரவேற்பும் ஆதரவும் இருக்கிறது என்று நினைக்கிறீர்களா?"

"ஓகோ என்று இல்லாவிட்டாலும் அதற்கு உரிய அளவு இருக்கத்தான் இருக்கிறது. பலர் மெல்லிசையில் ஈடுபாடு கொண்டிருந்தாலும் கூட, கர்நாடக இசை என்கிற அடித்தளம் இருந்தால்தான் அதில் சோபிக்கவும், நிலைத்து நிற்கவும் முடியும் என்று உணர்ந்து கொண்டு கர்நாடக இசை கற்க முன்வந்து கொண்டிருக்கிறார்கள். நல்ல" கச்சேரிகளையும் இசையில் ஈடுபாடுள்ளவர்கள் பலரும் வந்து கேட்டு ரசிக்கிறார்கள்."

"உங்களுடைய உழைப்புக்கும் தகுதிக்கும் ஏற்ற அங்கீகாரம் கிடைத்திருக்கிறதா?"

"நிச்சயமாய்! எத்தனையோ பரிசுகள், பட்டங்கள் தவிர, ரேடியோவில் சங்கீத சம்மேளனக் கச்சேரிகள், அகில பாரத இசை நிகழ்ச்சி இவையெல்லாம் என் உழைப்புக்கும் தகுதிக்கும் கிடைத்த அங்கீகாரமே! இந்திய அரசின் கல்வி அமைச்சகம் வழங்கும் கலாசார ஸ்காலர்ஷிப்பைப் பெற்ற ஒருவர், இசைத் துறையில் மிகச் சிறந்த பாடகர் ஒருவரிடம் தனியாகச் சிறப்புப் பயிற்சி பெறலாம். அப்படி மிகச் சிறந்த பாடகர் என்ற முறையில் என்னைத் தேர்ந்தெடுத்து ஒரு மாணவி என்னிடம் பயிலுகிறார். இது ஒரு தனி கௌரவம்தானே?"

மத்தியப் பிரதேசத்தில் உஜ்ஜயினில் சம்ஸ்கிருத நாடகங்களில் நடித்தும் பாடியதையும் ஆல்பங்களிலிருந்தபடங்களில் காண்பிக்கிறார்.

"ஆர். வேதவல்லியின் பாட்டில் இப்போது புது மெருகு ஏறியிருக்கிறது. ரவை ஜாதிகள் அபரிமிதமாக விழுகின்றன. சாரீரம் அலை பாய்வதே இல்லை. கார்வைகள் சுநாதமாக இருக்கிறது. எல்லாவற்றுக்கும் மேலாக ஸ்வச்சமான உச்சரிப்பு. தீட்சிதர் கிருதிகளுக்கு சாஹித்யம்தானே முக்கியம்? உச்சரிப்பு நச்சரிப்பாயிருக்கக் கூடாது அல்லவா! அகாடமியில் ஒரு ஷண்முகப்ரியா ஆலாபனை செய்திருக்கிறார் பாருங்கள் — அப்படியே அள்ளிக் கொண்டு போய்விட்டது." இது சுப்புடுவின் பாராட்டு!

பேட்டி: விசுவநாதன்



✱ வேதவல்லி



⌘ என். எம். நாராயணன்.



⌘ வி. வி. ரவி



⌘ ஆர். ரமேஷ்

# மலரும் கலைஞர்கள்

எதிர்காலத்தில் பிரகாசமாக விளங்கக் கூடிய வாய்ப்பும், 'மலரும் கலைஞர்' என்ற பட்டத்தை இப்போது நீங்கள் வழங்கக் கூடிய தகுதியும் உடையவர் என்று, இன்றைய இளம் கலைஞர்களில் யாரைக் குறிப்பாகச் சொல்வீர்கள் என நால்வரைக் கேட்டபோது:

இசைக் கலை அறிஞர் டி. எஸ். பார்த்தசாரதி சொல்கிறார்:

''வாய்ப்பாட்டில் நான் ஸ்ரீமதி நாகமணி ஸ்ரீநாத் அவர்களுக்குத்தான் 'மலரும் கலைஞர்' என்ற பட்டத்தைச் சூட்டுவேன். இவரிடம் அபார ஞானம் இருக்கிறது. சாரீரம் வெகு சுகமாக இருக்கிறது இவருக்கு. சம்பிரதாயம் வழுவாமல், சுத்தமான கர்நாடக சங்கீதம் பாடுகிறார். கேட்கிறபோது பரவசம் அடையச் செய்யும் வகையில் சேர்ந்தது இவரது இசை. இவரது எல்லாக் கச்சேரிகளுமே வெற்றிகரமாக அமைய இவையே காரணங்களாக இருக்கலாம்.''

'ஹிந்து' விமர்சகர் திரு என். எம். நாராயணன், வயலின் வாத்தியத்தில் வி. வி. ரவியையும், மிருதங்கத்தில் காரைக்குடி மணியின் சீடர் ஆர். ரமேஷையும் குறிப்பிட்டார்.

''ரவியிடம் அதிக ஞானம் இருக்கிறது. சரியான வகைத் திறமை (Right type of talent) இருக்கிறது. சிரத்தையுடன் கூடிய பயிற்சி இருக்கிறது. பாடகரை அனுசரித்து மிக கவனமாக வாசிக்கிறார். அநாவசியமான Gimmicks இல்லாமல் சுத்தமாக வாசிக்கிறார். இவர் ஒரு முறை திரு எம். டி. ராமநாதனுக்கு வயலின் வாசித்தார். அதை ஒரு பரீட்சை என்று வைத்துக் கொண்டால், அதில் வெகு திருப்திகரமாகத் தேறிவிட்டார் என்று சொல்லலாம். ஆர்ப்பாட்டம் இல்லாது, ஆற்றொழுக்கான வாசிப்பு ரவிக்குக் கை வந்திருக்கிறது.

''மிருதங்கம் கற்றுக் கொண்டு நிறையப் பையன்கள் அரங்கேற்றம் செய்கிறார்கள். சங்கீத ஞானம் தேவையில்லாமல் வெறும் தாளம் மட்டுமே மிருதங்கம் வாசிக்கப் போதுமானது என்பதே இதற்குக் காரணம். அதனால்தான் பலரின் வாசிப்பு, சங்கீதத்தோடு ஒட்டாமல் இருக்கிறது. இசையறிவும் சேரும்போதுதான் மிருதங்க வாசிப்பு கேட்கும்படியாக இருக்கிறது. மிருதங்கம் வாசிக்கிற ரமேஷிடம் கையில் ஓட்டம் இருக்கிறது. சங்கீதமும் தெரிந்திருக்கிறது. நாதம் (tonal quality) நன்றாய் இருக்கிறது. இன்னும் சிரத்தை எடுத்துக் கொண்டால் மிருதங்க வாசிப்பில் ஒரு முக்கிய இடம் இவருக்கு நிச்சயம் உண்டு.''

'எக்ஸ்பிரஸ்' விமர்சகர் ஸ்ரீமதி ரஞ்சனி சுவாமிநாதன், வீணையில் சிட்டிபாபுவின் சீடர் எஸ். சுந்தரையும், புல்லாங்குழலில் ரமணியின் சீடர் வி. ரங்கராஜையும் பளிச்சென்று சொல்லுகிறார்.

''அநாவசியமான மேதைத்தனமாகவும் இல்லாமல், வறட்டுத்தனமாகவும் இல்லாமல் வாசிக்கிறார் சுந்தர். பரிசுத்தமான இசை

⌘ ரஞ்சனி சுவாமிநாதன்



⌘ எஸ். சுந்தர்





⌘ கே. எம். ரங்கசாமி



⌘ திருமதி சுகன்யா ராம்கோபால்

நீரோட்டம் போலத் தெளிவான வாசிப்பு. ராகத்தின் சாரத்தை, அதிகம் நீட்டாமலே அழகாகக் காட்டிவிடுகிறார். தேவையில்லாததாக வேலைகள் செய்யாமல், ஸ்வரத்தை லயத்தோடு வாசிக்கிறார். பாட்டின் Moodஐ ராகம் வாசிக்கும்போது நன்ருகப் பிரதிபலிக்கிறார்.

''புல்லாங்குழல் வாசிப்பில் ரமணியின் பாணி துல்லியமாகத் தெரிய, பொறுப்போடு வாசிக்கிறார் ரங்கராஜ். இனிமையாகவும் சீராகவும் இவரது வாசிப்பு அமைந்திருக்கிறது. கர்நாடக இசையில் இவருக்கு இருக்கிற திடமான அஸ்திவாரம் இவர் வாசிப்பில் தெரிகிறது.''



⌘ டி. எஸ். பார்த்தசாரதி

'மெயில்' விமர்சகர் கே.எம். ரங்கஸ்வாமி கடம் வாசிக்கும் இளம் பெண் ஸ்ரீமதி சுகன்யா ராம்கோபாலை (பி. எஸ்ஸி.) தேர்ந்தெடுத்தார்.

''1. கை பரம சுத்தம்; 2. பிரமாதமான லயம்; 3. இவர்



⌘ நாகமணி ஸ்ரீநாத்



⌘ வி. ரங்கராஜ்

கடம் வாத்தியத்தில் எழுப்புகிற ஒலி அசாத்யமானது. (பெண்களிலேயே கடம் வாசிப்பவர் இவர் ஒருவர்தானுமே?) சமீபத்தில் திருமணமான இந்தப் பெண், தொடர்ந்து கச்சேரிகளில் வாசிப்பாரா என்பது கேள்விக்குறி. ஆனால் ஒரு சுடர் விடக்கூடிய கலைஞர் இவர் என்பதில் எனக்குச் சந்தேகமே இல்லை.'' பேட்டி: வாதூலன்

# பிருந்தாவனக் கண்ணில் பிறக்கும் வசந்தங்கள்



யுகமலரின்
மகரந்த விருப்புகளை
உதிர்த்து என்னுள்
இன்பநறவை நிரப்பும்
சுவர்க்கப் பறவையே!

சொந்தங்கள் அற்றிருந்தேன்.
நீ ஒரு
சுந்தரப் புல்லாங்குழலாய்ச்
சுவீகரித்துக் கொண்டபின்
சோக மூட்டத்திலிருந்து
விடுபட்ட
பண்ணுனேன்!

அரும்பும் என் கனவுகளை
ஆதரிக்கத் தானே
உன்
பிருந்தாவனக் கண்கள்
பிறப்பிக்கும் வசந்தங்கள்!

நோகாமல் என் விடியல்
நூறுநூறு பூத்திட
நீயே
ஆகாயமாகி அனுகூலம் செய்கிறாய்!

வியாகூலம் அடைந்த
என் வேள்விகளுக்கு
வரங்களின்
நியாயம் பராமரிப்பை
நிச்சயம் பதித்துவிட்டாய்!

சிறுவைப்பாடு உற்ற
என் சிவன்
சிலிர்த்தெழுந்து புன்னகைக்கச்
சுருசித்து நீண்டல் உன்
கருணையல்லவா?

சூனிய நெரிசலில்
தொடர்ந்து தனிமைகளை
ஏன் மேய்த்துச்
சலிக்கின்றாய்?
எனவந்து என்னை மீட்டுக் கொண்
டாய்!

எனக்குள்ளே என் பயணம்
இலட்சியம் உன் சந்நிதியில்
எனக்குள்ளே என் கண்ணில்
எதிர்வது
உன் தரிசனமே!

- தமிழன்பன்

● அட்டை, முகப்பில் இடம்பெற்ற பிரஷ்னேவ் வண்ணப் படத்தைப் பார்த்துவிட்டு அடிக்கடி வானத்தைப் பார்த்தேன் இன்று மழை வருமா என்று!

இராஜபாளையம் — எஸ். விஜயன்

● ரஷ்யாவில் புறப்பட்டு, பிரஷ்னேவ் இந்திய விஜயம் செய்வதற்கு முன்பே கல்கி மூலம் விஜயம் செய்துவிட்டார்! ஷான் படம் வெளிவருவதற்குள்ளாகவே அப்படத்தின் பெருமைகளைக் காண் என்கிறீர்கள். கல்கியின் சுறுசுறுப்பும் விறுவிறுப்பும் பிரமிக்க வைக்கிறது!

சென்னை-15 — ஆண்டாள் பிரியதர்சினி

● கதையை முடிக்கத் தெரியாத கோழையாகிவிட்டார் கதாசிரியர் கருணாமணாளன். சுமாவின் இடத்தில் நானாக இருந்திருந்தால் நிச்சயம் ஸீனத்தை மறுமணம் புரிந்திருப்பேன். ஹூம்... இப்படிப்பட்ட கதைகள் உண்மை வாழ்வில் நிகழ்ந்தால், சமுதாய சீர்திருத்தமும், மாற்றமும் எவ்வாறு ஏற்படும்?




விருத்தாசலம் — எஸ். இம்ராம்கான்

● உபதேர்தல்கள் பற்றி எழுதியிருந்த இத்துனூண்டு தலையங்கம் கண்டேன். நீங்கள் எழுதியதற்கு மாறாக நடந்திருந்தால் சும்மா இருந்த வாய்க்கு மெல்ல அவல் கிடைத்தது போல் நீங்கள் எப்படி எழுதியிருப்பீர்கள் என்று கற்பனை பண்ணும்போது மனத்துக்குள் சிரிக்கத்தான் முடிகிறது.

சிவகாசி — இரா. சுரேஷ்குமார்

● இன்றைய இந்திரா காங்கிரஸ்காரர்கள் இடைத் தேர்தலில் பெற்ற வெற்றியைக் கூறித் தம்பட்டம் அடித்துக்கொண்டிருக்கும் நேரத்தில் அருமையாகத் தலையங்கம் எழுதி அவர்களுக்குச் சூடு போட்டமைக்கு நன்றி.

ஈரோடு — கல்யாண்குமார்

● ஸ்திரமான ஆட்சியாக இருந்தால் மட்டும் போதாது; திறனுள்ள ஆட்சியாகவும் இருக்க வேண்டும் என்று தலையங்கம் எழுதியுள்ளீர்கள். தேர்தலில் ஓட்டுக் கேட்கும் போது நிலையான ஆட்சி அமைத்திட என்று தான் ஓட்டுக் கேட்டார்களே தவிர திறமையான ஆட்சி அமைத்திட என்று கேட்கவில்லையே! தேர்தல் வாக்குறுதியில் இல்லாததை எப்படி நிறைவேற்ற முடியும்!

திருநெல்வேலி-7 — ப. தமிழ்மணி

● பொதுத் தேர்தல்கள் ஆட்சியை 'அமைக்க' உதவும்; உபதேர்தல்கள் ஆட்சியை 'அசைக்க' உதவும் என்று ஜனநாயக வழிமுறை அறிந்தவர்கள் கூறுவார்கள்.

சமீபத்தில் நடந்த 15 சட்ட மன்ற உப தேர்தல் முடிவுகளோ.... மக்களின் விழிப்புணர்ச்சி பற்றிய நம்பிக்கையை அல்லவா ''அசைக்க'' உதவி விட்டன.

திருச்சி-18 — டி. ஆர். பத்மா

● நம் டைரக்டர்கள் எடுத்துள்ள புதுமைகளையே ஜீரணிக்கக் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கும் இவ்வேளையில், எடுக்கவிருக்கும் புதுமையை வெளியிட்டு ஏனய்யா வயிற்றெரிச்சலைக் கிளப்புகிறீர்?

கிணத்துக்கடவு — எம். ரமணி

● 'மோடி மஸ்தான்' நாடக விமரிசனத்தில் விகடசாந்தியின் பி.ஆர்.ஓ. சந்திரசேகர் சென்னையில் முன்பு 140 சபாக்கள் இருந்தன என்றும் இப்பொழுது 100தான் உள்ளன என்றும் கூறியுள்ளார். இந்தக் கணக்கு பிசகு. உண்மை நிலைமை இதைவிட மோசம். சென்னையில் இன்று 65 சபாக்கள்தான் உள்ளன. மேலும் பல சபாக்கள் நலிந்து கொண்டே வருகின்றன.

சென்னை-1 — நடேஸ் கே. மூர்த்தி

● சுஜாதா சுஜாதா என்று ஸ்ரீ ராமஜெயம் எழுதுவதுபோல் 62 தரம் எழுதியுள்ளீர்களே? பாக்கி இருக்கும் காலி இடத்தில் இன்னும் 46 தடவை எழுதி 108 ஆகச் செய்திருக்கிறேன். பெற்றுக்கொள்ளவும்!

சென்னை — வெ. முத்துகிருஷ்ணன்

● வர வர கல்கி அட்டையின் தரம் கூடிக்கொண்டு வருகிறது. என்ன விசேஷமோ, என் மகிழ்ச்சி; மனம் நிறைந்த வாழ்த்துகள்!

சைதாப்பேட்டை — அ. வைத்தியநாதன்

● தர்மசங்கடம் தம்புவுக்குப் பிறகு தலையெடுத்து இருக்கும் ''வம்பன் வெங்கு'' எல்லா வம்புகளையும் (தர்ம) விலை கொடுத்து வாங்குவான் போலிருக்கிறதே!

ஈரோடு — ஷோபனு குமார்

இந்திரா பார்த்தசாரதி



# வெந்து தணிந்த காடுகள்

7

தாமோதரன் வீடு 'க்ரீன் பார்க்கி'ல் இருந்தது. பார்வதி இரண்டாம் மாடியை அடைந்ததும், கதவில் ஒரு சிறிய துண்டுக் காகிதத்தில் ஓர் அறிவிப்புத் தொங்கியது. 'உங்களுடைய பலம் எனக்குத் தெரியும். ஆனால் என்னை மெதுவாகத் தட்டுங்கள்!'

விம்மி அதைப் படித்துவிட்டுப் புன்னகை செய்தாள்.

''சிலபேர் வாழ்க்கையிலே அவங்க அடையற ஏமாற்றத்துக்கு இதுதான் போக்கிடங்கிற மாதிரி அவங்க ஆத்திரத்தை யெல்லாம் இந்தக் கதவு பேரிலே காட்டுவாங்க... அவங்களுக்காக இது...'' என்றான் தாமோதரன்.

''இங்க வர்றவங்கல்லாம் வாழ்க்கையிலே ஏமாற்றம் அடைஞ்சவங்கதானா?''

''வாழ்க்கையிலே வெற்றி அடைஞ்சவங்க என்னை ஏன் பார்க்க வராங்க, அதுவும் ரெண்டு மாடி ஏறி?'' என்று சொல்லிக் கொண்டே அவன் கதவைத் திறந்தான்.

'' 'ஓப்பன் டெர்ரேஸ்' ஒரு சின்னக் கூட்டமே இங்கே நடத்தலாம்'' என்றாள் விம்மி.

''இங்கே நாடகம் நடக்கிறது உண்டு. பல சமயங்களில் பொயட்ரி ரீடிங்... நிறையப் பேர்கிட்டே சாவி இருக்கு. யார் வேணுமானாலும் வரலாம். போகலாம்... 'ஓபன் ஹௌஸ்'...''

விம்மி மதில் சுவரருகே நின்றுகொண்டு கீழே நோக்கினாள். கண்ணுக்குத் தெரிந்த தூரம்வரை ஒளிப் பூக்கள். பார்க்க ரம்மியமாக இருந்தது.

'' 'இட் ஸஸ் எ ப்யூட்டிஃபுல் ஸைட்!'' என்றாள் விம்மி.

தாமோதரன் அறைக் கதவைத் திறந்து கொண்டிருந்தவன் திரும்பிப் பார்த்தான்.

''சம்மர்லே மணிக் கணக்கா சாயந்திர வேளையிலே அங்கே உட்கார்ந்திண்டு நான் வேடிக்கை பார்க்கிறது வழக்கம். ஜனங்களை, அவங்களுக்குத் தெரியாமெ, அவர்களை வேடிக்கை பார்க்கறது போல ஒரு நல்ல பொழுது போக்கு எதுவும்இருக்க முடியாது.''

''கடவுளும் நம்மை அப்படித்தான் வேடிக்கை பார்த்திண்டு இருக்காரோ என்னவோ!'' என்று கூறிக்கொண்டே அறைக்குள் நுழைந்தாள் விம்மி.

''அவராலே வேடிக்கைதான் பார்க்க முடியும். ஒண்ணும் செய்ய முடியாது. அவர் படைச்ச 'ஃப்ராங்கன்ஸ்டீன் மான்ஸ்டர்' தான் மனுஷன்....''

அறை முழுவதும் ஓவியங்கள் இறைந்து கிடந்தன. மேஜை, நாற்காலி, சோபா எதுவுமே இல்லை. சணல் கார்ப்பெட்... கீழே தான் உட்காரவேண்டும். அங்கு மிங்கும் திண்டுகள், கைக்கு ஆதாரமாக வைத்துக் கொண்டு உட்காரப் போடப் பட்டிருந்தன.

''ரெண்டு ரூம். அது பெட் ரூம்...இதுதான் என்னுடைய வரவேற்பறை....'' என்று புன்னகையுடன் கூறினான் தாமோதரன்.

படுக்கை அறையிலும் நிறைய ஓவியங்கள் தாறுமாறாகக் கிடந்தன. ஃபர்னிச்சரைப் பொறுத்தவரையில் படுக்கை அறைக்கும் வரவேற்பறைக்கும் அதிக வித்தியாசமில்லை. சணல் கார்ப்பெட், திண்டுகளுக்குப் பதிலாகத் தலையணைகள், மடித்து வைக்கப்பட்டிருந்த பட்டுப் பாய்கள். சுவரோரமாக ஒரு நீண்ட புத்தக அலமாரி. அலமாரியின் மேலேயும் நிறையப் புத்தகங்கள் குப்பையாகக் குவிந்திருந்தன.

''ஒரு 'வுமன்ஸ் மேகஸின்'லே சில பிரபல 'ஆர்டிஸ்ட்கள்' வீடுகள் எவ்வளவு கலை ரசனையோட இருக்குன்னு காட்ட 'போட்டோகிராப்ஸ்' வந்திருந்தது. உங்க வீடும் அப்படித்தான் இருக்கும்னு நான் நினைச்சேன்'' என்று சிரித்துக்கொண்டே சொன்னாள் விம்மி.

''இந்த 'ஆர்டிஸ்ட்'டே கோணல் மாணலாக இருக்கிறபோது வீடு எப்படி இருக்கும்?''

''வெளித் தோற்றத்தைப் பற்றி ஏன் உங்களுக்கு இப்படியொரு தீவிரமான 'அப்செஷன்'?''

''எனக்கா, உங்களுக்கா?.. நீங்கதானே. இப்போ என் வீட்டைப் பத்தி விமர்சனம் செய்யறீங்க?'' என்றான் தாமோதரன்.

''ஐ ஆம் ஸாரி'' என்றாள் விம்மி.

''திடீர்னு ஏன் இந்த 'ஃபார்மாலிட்டி'? நீங்க வருத்தப்பட வேண்டிய அவசியமே யில்லே...நான் வீட்டை இப்படி வச்சிண்டிருக்கிறதுக்கு இன்னொரு காரணமும் உண்டு.''

''என்ன?''

''எந்த பொம்பளைப் பத்திரிகை ரிபோர்ட்டரும் என்னை இங்கே வந்து தொந்தரவு செய்ய மாட்டாங்க இல்லையா?''

'பொம்பளைப் பத்திரிகை' என்று அவன் குறிப்பிட்டது அவளுக்கு என்னவோ மாதிரி இருந்தது. பெண்களைக் கண்டால் இவன் அடி மனத்தில் ஒரு வெறுப்பு இருக்கும் போலிருக்கிறது.

அவள் இறைந்து கிடந்த ஓவியங்களை எடுத்து அடுக்கத் தொடங்கினாள்.

'' 'பொம்பளைப் பத்திரிகை'ன்னு சொல்லியிருக்கக் கூடாதுன்னு நினைக்கிறீங்களா?''

அவள் அவன் பக்கம் திரும்பிப் புன்னகை செய்தாள்.

''பெண்களைக் கண்டா எனக்கு வெறுப்பு கிடையாது... இன்ஃபாக்ட், ஐ லைக் தெம்... பட்...பெண்களுக்குன்னு தனிப் பத்திரிகைங்கிற 'கான்ஸெப்ட்'தான் எனக்குப் பிடிக்கலே. இது ஒரு வகையிலே பார்க்கப்போனா தாழ்வு மனப்பான்மையைத்தான் காட்டறது... இந்தப் பத்திரிகைகளிலே வரும் விஷயங்களும் அப்படித்தான் இருக்கு...''

''எப்படி 'இருக்கு?''

'' 'சீரியஸ்' விஷயங்களைச் சொல்லக்கூடாதுங்கற கவனம்... சொன்னா, பெண்களுக்குப் புரியாதுங்கற மாதிரி ஓர் எண்ணம்... இதை நடத்துறதும் பெரும்பாலும் ஆம்பிள்ளைகள்தான்... தன்னை மதிக்கத் தெரிஞ்ச ஒவ்வொரு பெண்ணும் இதை எதிர்க்கணும்.''

''நமது சமூகத்திலே எத்தனை பெண்களுக்கு 'சீரியஸ்' விஷயங்களைப் பத்தி அக்கறை இருக்கு?'' என்று கேட்டவாறு, ஒரு திண்டைப் பக்கவாட்டில் வைத்து, அதில் சாய்ந்து கொண்டாள் விம்மி.

''பெண்களை அப்படிக் 'கண்டிஷன்' பண்ணியிருக்காங்க, ஆம்பிளை ஆதிக்கமுடைய நம்ம சமூகத்திலே... வாத்சாயனர் பெண்களை வகை வகையாப், பிரிக்கிறாரே, ஏன் ஆண்களைப் பிரிக்கக் காட்டலே? ஆண்களுக்கு வேண்டிய போகப் பொருள் பெண்கள், அவர்கள்லே இத்தனை 'வெரைட்டி' இருக்கு, ஆண்கள் தேர்ந்தெடுக்கலாம் அவங்களுக்கு விருப்பமானதை அப்படின்னுதானே இதுக்கு அர்த்தம்? பெண்கள் அவர்களுக்கு விருப்பமானதைத் தேர்ந்தெடுக்க வசதியா ஆண்களைப் பிரிக்கக் காட்டியிருக்கக்கூடாது? திருக்குறள் படிச்சிருக்கீங்களா? 'வாழ்க்கைத் துணை நலம்'னு மனைவி எப்படி இருக்கணுங்கிறாரே வள்ளுவர், கணவன் எப்படி இருக்கணும்னு ஒரு அதிகாரம் பாடியிருக்கலாம் இல்லியா?''

''நீங்க ஒரு இயக்கம் ஆரம்பிங்க பெண்கள் உரிமைக்கு, நானும் அதிலேசேர்ந்துடறேன்.''

''அதுவும் நான்தான் ஆரம்பிக்கணுமா?'' என்று கேட்டான் தாமோதரன்.

விம்மி சிரித்தாள்.

அவள் அவனுடைய ஓவியங்களைப் பார்க்கத் தொடங்கினாள். அவன் சிகரெட்டைப் பற்றவைத்தபடி உள்ளே சென்றான்.

அடி மனத்தின் ஆழத்தை எவ்வளவு கலபமாக வண்ணத்தின் மூலம் இவளால் தொட முடிகிறது? மனித உணர்வுகளின் வெவ்வேறு பாவங்களை இவளால் வண்ணத்தின் மூலம் தெரிவிக்க முடிகின்ற ஆற்றல்! அவ்வண்ணங்கள் அவளுடைய உள் மனத்தோடு உறவாடித் தோற்றுவித்த கனவுச் சித்திரங்கள்! நீரில் தோன்றும் குமிழிகளாய் அவை அடுக்கடுக்காய் எழுந்து, நினைவில் நினைத்து வைத்து அடையாளம் காண்பதற்



குள் மறைந்தன. எந்தக் கலை வடிவமும் அவனளவில் நின்றுவிடாமல், பார்க்கின்றவர்களின் படிக்கின்றவர்களின் அனுபவத்துக்கேற்ப அவர்களைச் சலன முறச் செய்ய வேண்டுமென்பது எவ்வளவு உண்மை! அப்படங்களைப்பார்க்கும்போது, இவன் தாந்திரீக உபாசகன் என்று தெரிகின்றது. பெண்கள் உரிமைகளைப் பற்றி இவன் ஆவேசமாகப் பேசுவதற்கும் இது தான் காரணமாக இருக்க வேண்டும்...

''காப்பி...'' என்று கூறியவாறு அவளிடம் ஒரு மக்கை நீட்டினான் தாமோதரன்.

''தாங்க்யூ... சமைச்சுச் சாப்பிடறீங்களா நீங்க?'' என்று கேட்டாள்.

''எஸ்... ஸம்டைம்ஸ்... நான் அப்படி ஒண்ணும் மோசமான சமையல்காரனில்லே. நான் நல்ல பெயிண்டரா இல்லாட்டா சமையல்காரனுன்னு சொல்றது கஷ்டம். என் சமையலைச் சாப்பிடறவங்க, நான் நல்ல பெயிண்டர்'ங்கிறாங்க, என் படங்களைப் பார்க்கிறவங்க, நல்ல சமையல்காரங்கிறாங்க....''

விம்மி வாய் விட்டு உரக்கச் சிரித்தாள்.

''நான் இப்ப என்ன சொல்லணும்? நீங்க நல்ல சமையல்காரர்னு?'' என்று சொல்லிக் கொண்டே ஓவியங்களைக் கீழே வைத்தாள்.

''என் ஓவியங்களைப் பத்தி உங்களுக்கு நல்ல அபிப்பிராயம் ஏற்படணும்னு நான் சமைச்சாகணும்'' என்றான் தாமோதரன்.

''ப்ளீஸ்... நீங்க சமைக்க வேணும். உங்க சமையலைப் பத்தி நல்ல அபிப்பிராயத்தோடேயே வீட்டுக்குப் போறேன்.''

''இதுதான் என் படங்களைப் பத்திய விமர்சனம்னு நினைக்கிறேன்....''

''நோ...நோ.... டெட் அஸ் பி சீரியஸ். நான் இவைகளைப் பார்க்கிறதே, நீங்க எனக்களித்த சலுகை...அபிப்பிராயம் சொல்ல எனக்குத் தகுதி இருக்கா, அதான் தெரியலே...''

தாமோதரன் காப்பியைக் குடித்துவிட்டு மக்கைக் கீழே வைத்துவிட்டு, அவளைப் பார்த்துப் புன்னகை செய்தவாறு கூறினான்: ''இதுதான் தாழ்வு மனப்பான்மைங்கிறது.''

''நம்ம ரெண்டு பேருக்குமிடையே இருக்கிற தூரத்தைப் பற்றிய பிரக்ஞை... நான் இப்போத்தான் போட ஆரம்பிச்சிருக்கேன்.. நீங்க.....''

தாமோதரன் குறுக்கிட்டான்: ''கலையைப் பொறுத்த வரையில், ஆரம்பம், அநுபவம் இதைப் பத்தியெல்லாம் எனக்கு நம்பிக்கை இல்லே. ஒரு சிறந்த கலைஞன் தன் முதல் படைப்பிலேயே தன்னை அறிவித்துக் கொள்கிறான். உங்க படங்களைப் பார்த்தப்புறம், நீங்க ஒரு நல்ல பெயிண்டர்ங்கிறதைப் பத்தி எனக்குக் கொஞ்சம் கூட சந்தேகமில்லே.... 'ஐ மீன் இஸ்....''

'' 'தாங்க்யூ!... உங்க படங்களைப் பார்த்தவுடன் எனக்குத் தோணித்து.....''

''சொல்லுங்க...''

''நீங்க தாந்திரிக உபாசகர்னு... அதனால் தான் பெண்கள் உரிமைகளைப் பத்தி...''

''ப்ளீஸ்... இந்த 'இஸீஸ்'லாம் வேண்டாம். 'ஸர்ரியலிஸம், இம்ப்ரெஷனிஸம், க்யூபிஸம்....' மை காட்... ஐ ஹேட் தெம்' நான் எனக்குள்ளே இருக்கிற ஏதோ ஒண்ணை அழிச்சுண்டு அந்தப் படமா அவதாரம் எடுக்கிறேன்... எஸ்... 'தி சீக்ரெட் ஆஃப் ஆர்ட் ஈஸ் செல்ஃப் ஆப்லிவியன்' ஒவ்வொரு படமும் என்னுடைய புதுப் பிறவி. இது வெறும் இஸீஸ்'லே அடங்கிற விஷயம் இல்லே.... கலைதான் உண்மை. குள்ளமா, கோணல் மாணலா, முதுகிலே ஒரு பெரிய மூட்டையைச் சுமந்திண்டிருக்கிற தாமோதரனுலே, வண்ணம் வண்ணமா பார்க்கிறவங்க பிரமிக்கும்படியா, தன்னை வெளிப்படுத்திக்கொள்ள முடியும்... இதான் முக்கிய விஷயம். எஸ். தாமோதரன் ஒரு 'இல்யூஷன்'... அவன் கலை... 'தி ரியாலிட்டி' ...ஹ ஹா... ஹ ஹா....''

திடீரென்று அவன் சிரிப்பதை நிறுத்திவிட்டுக் கண்களை மூடிக்கொண்டான்.

அவன் கண்களைத் திறப்பான் என்று அவள் பொறுமையாகக் காத்திருந்தாள். ஆனால் அவன் கண் திறப்பதாகத் தோன்றவில்லை.

தூங்கிவிட்டான் போலிருக்கிறது.

இப்பொழுது என்ன செய்வதென்று அவளுக்குப் புரியவில்லை. அவள் எழுந்து உள்ளே சென்றாள். புத்தக அலமாரி அருகே சென்று புத்தகங்களைப் பார்வையிடத் தொடங்கினாள்.

எல்லாமே அநேகமாக இலக்கியம், ஓவியம் தத்துவம் பற்றிய புத்தகங்கள். நாடக நூல்களும் இருந்தன. அலமாரியின் கீழ் தட்டில் ஓரமாக ஓர் 'ஆல்பம்' இருந்தது. அதை எடுத்துப் பிரித்துப் பார்த்தாள்.

பல புகைப்படங்கள். பல நண்பர்களுடன் அவன் சேர்ந்து எடுத்துக் கொண்ட படங்கள். ஒன்று அவனுடைய குடும்பப் படம் போல் இருந்தது.

அவனுடைய அப்பா ஐ.ஸி.எஸ்.காரர் என்று 'இண்டர் நேஷனல் சென்டர்' ராமச்சந்திரன் சொன்னது அவள் நினைவுக்கு வந்தது. ஒரு மிடுக்குடன் உட்கார்ந்திருந்தார். அவனுடைய அம்மாவும் பார்க்க அழகாக இருந்தாள். இருவரும் நல்ல உயரம். எடுப்பான தோற்றத்துடன் மிகவும் வசீகரமாயிருந்த பெண் தாமோதரனின் சகோதரியாயிருக்க வேண்டும். அவனை முதன் முதலில் சந்தித்தபோது அவன் கூறியது அவள் ஞாபகத்துக்கு வந்தது. 'அந்த நான் முயவன் கை ஆட்டத்தாலே நேர்ந்த பிழை நான்...' யாருடைய குரூர ஹாஸ்யம் இது?

---

சபா ஹால்: (ஜனங்கள் எல்லோரும் வெளியே ஓடி வருகிறார்கள்.)

ஒருவர்: எல்லோரும் வெளியே ஓடி வராங்களே! என்ன சங்கதி!

மற்றவர்: உள்ளே பாடற நம்ம பாகவதரோட ''சங்கதி'' தான்!

-வெ. சீதாராமன்



பிடில் வித்வான்: என்ன சீட்டு?

பாகவதர்: நகுமோமு கீர்த்தனை ரொம்பப் பிடிச்ச ஒருத்தர் அனுப்பி யிருக்கார்.

பிடில் வித்வான்: ஆசையா கேட்கறார்ன்னு பாடிட வேண்டியது தானே?

பாகவதர்: அவருக்குப் பிடிச்ச அந்தக் கீர்த்தனையை இந்த மேடை யிலே நாம கொலை செஞ்சா கச்சேரி முடிஞ்சதும் கொலை விழும்ன்னு எழுதி அனுப்பி இருக்கார்!

-கே. ஆர். எம்.



இப்படி யொரு அழகான குடும்பத்தில் பிறந்தது தன்னுடைய தவறு என்பது போல, அவன் அவர்களிடமிருந்து பிரிந்து தனியாக இருக்கிறான் என்று அவளுக்குத் தோன்றியது. அந்தப் படத்தையே அவள் சிறிது நேரம் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள். இவன் இவ்வாறு பிறந்திருப்பது அவனுடைய குற்றம் தானா? விதி என்று கூறுவது கணக்கில் வரும் லட் பி எக்ஸ் என்பதைப் போலத்தான்.

அவள் இன்று இப்பொழுது 'சென்டரில்' எதேச்சையாகச் சந்தித்த ஒருவன் வீட்டில் அவன் பக்கத்து அறையில் தூங்கிக் கொண்டிருக்கும்போது அவனுடைய 'ஆல்பத்தை' பார்த்துக் கொண்டிருக்கப் போகிறோமென்று போன மாதம் இதே தேதி எண்ணிப் பார்த்திருப்பாளா? இது எதேச்சையாக ஏற்பட்ட சம்பவந்தானா அல்லது இதற்கு வேறு காரணம் இருக்கிறதா?

அருணுடன் ஒரு நல்ல இல்லத்தரசியாக அவன் உடைமைகளில் ஒரு சிறந்த 'அலங் காரப் பொம்மை'யாக' நடித்துக்கொண்டிருக் கும்போதெல்லாம் அது ஒரு 'வெஜிடபிள்' வாழ்க்கையாகத்தான் இருந்தது. இப் பொழுதுதான் அவளால் அவளுடைய சுதந்திரத்தின் எல்லையை உணர முடிகிறது! 'நல்லதோர் வீணை செய்தே, அதை நலங் கெடப் புழுதியில் எறிவதுண்டோ?'

அப்பொழுது வாசலில் பேச்சரவம் கேட் டது. விம்மி வேகமாக வாசலை நோக்கிச் சென்றாள்.

தாமோதரன் இன்னும் தூங்கிக் கொண் டிருந்தான்.

ஐந்து இளைஞர்கள். மூன்று ஆண்கள்; இரண்டு பெண்கள். அவர்கள் விம்மியை ஏற இறங்கப் பார்த்தார்கள்.

''மிஸ்டர் தாமோதரனைத் தேடி வந்திருக் கிறீர்களா?''

''எஸ்'' என்றான் அவர்களில் ஒருவன்.

''உள்ளே வாருங்கள். தூங்குகிறார். என் பேர் விம்மி.... இன்று 'ரவீந்திர பவனில்' இவரைச் சந்தித்தேன். அவர் படங்களைப் பார்ப்பதற்காக இங்கு வந்தேன்.''

அவர்கள் உட்கார்ந்தார்கள்.

ஜீன்ஸ், ஜெர்க்கின்ஸ் அணிந்திருந்த ஒரு பெண் கூறினாள்: ''நாங்கள் தாமோதரனின் நண்பர்கள். என் பேர் ரீனா'' என்று சொல்லிய வாறு மற்றவர்களை, ''கவிதா, டோனி, ப்ரேம், வினோத்'' என்று அறிமுகப்படுத்தினாள்.

''உங்களைப் பற்றித் தாமோதரன் இதுவரை குறிப்பிட்டதில்லை'' என்றான் டோனி.

''குறிப்பிட்டிருக்க முடியாது. இன்றுதான் நாங்கள் நண்பர்களானோம்.''

''நீங்களும் ஓவியம் வரைவதுண்டா?''- என்றாள் கவிதா. அழகான பெண். மேலே சால்வை போர்த்தியிருந்தாள்.

''எஸ்....இப்போதுதான் ஆரம்பித்திருக் கிறேன்.''

''உங்களை அழைத்து வந்துவிட்டுத் தாமோ தரன் ஏன் தூங்குகிறான்?'' என்று கேட்டான் வினோத்.

நடந்ததைச் சொல்ல வேண்டுமா என்று விம்மி சற்று யோசித்தாள். சொன்னால் என்ன என்று தோன்றிற்று. சொன்னாள்.

''தாமோ தூங்க ஆரம்பித்துவிட்டால் அவனைஎழுப்பவேமுடியாது'' என்றான், ப்ரேம்.

''நீங்களும் சைத்ரிகர்கள்தானா?'' என்று கேட்டாள் விம்மி.

''நோ... நானும் கவிதாவும் தியேட்டர். டோனி கவிதை எழுதுகிறான். ப்ரேமும் வினோத்தும் பத்திரிகைக்காரர்கள்... சிறு கதைகள் எழுதுவதுண்டு.'' என்றாள் ரீனா.

''எங்களை ரவீந்திர பவனுக்கு வரச்சொல்லி யிருந்தான் தாமோ. அவனுக்காக அங்கு காத்திருந்தோம்'' என்றாள் கவிதா.

''ஐ ஆம் ஸாரி'' என்றாள் விம்மி.

''நோ... உங்களைக் குற்றம் சாட்டவில்லை'' என்றான் டோனி சிரித்துக் கொண்டே.

''நீங்கள் எங்கே இருக்கிறீர்கள்? பக்கத் தில்தானா?'' என்றாள் ரீனா.

''பக்கத்தில் என்று சொல்ல முடியாது... காஃல்ப் லிங்க்ஸ்.''

''காஃல்ப் லிங்க்ஸ்....! வாவ்'' என்று முகம் ஆச்சரியத்தால் மலர கன்னங்களில் கையை வைத்துக் கொண்டாள் கவிதா.

''என் கணவர் ஒரு 'பிஸினஸ் எக்ஸிக்யூடிவ்' ஆகவே, நான் காஃல்ப் லிங்கிஸில் இருப்பதும் என் குற்றம் என்று சொல்ல முடியாது.''

''ஓ!... நீங்கள் திருமணம் ஆனவரா?'' என்று கேட்டாள் ரீனா.

''அதுவும் என் குற்றம் என்று சொல்ல முடியாது.''

எல்லோரும் வாய் விட்டுச் சிரித்தார்கள்.

''வாட் ஈஸ் கோயிங் ஆன் ஹியர்?'' என்ற குரல் கேட்டதும் அவர்கள் திரும்பினார்கள்.

தாமோதரன் எழுந்துவிட்டான்.

''விம்மி வருகையைக் கொண்டாடுவோம். வினோத், பாட்டிலை எடுத்துக் கொண்டு வா... டோனி, உன் கவிதைகளைப் படி.... ஆ!... 'வையத்தரும் இவ்வனமன்றி வாழும் சொர்க் கம் வேறுண்டோ?'' என்றான் தாமோதரன் கண்களைக் கசக்கிக் கொண்டே. (தொடரும்)

# ஸ்ரீ வெங்கடேஸ்வர (பாலாஜி)
# பஞ்சரத்னமாலா எல்.பி. 4

ஏழுமலையானின் இணையடிகளில் ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மி
சமர்ப்பணம் செய்யும் இன்னொரு காணிக்கை.













திருமலை திருப்பதி தேவஸ்தானங்களின் ஆதரவில் கிராமஃபோன் கம்பெனி ஆஃப் இந்தியா வெளியிடும் ஸ்ரீ. வெங்கடேச்வர (பாலாஜி) பஞ்சரத்னமாலா என்கின்ற ஐந்து எல்.பிக்கள் கொண்ட தொகுப்பில் இது நான்காவது இசைத்தட்டாகும்.

இந்த இசைத்தட்டில் ஒலிக்கும் ஸம்ஸ்கிருத ச்லோகங்களில் நம் நாட்டின் தலைசிறந்த மஹாபுருஷர்களின் இதய தாபங்களையும் திவ்விய திருஷ்டிகளையும் பிரதிபலிக்கும் காவிய நயமும் அனுபூதி கனமும் மிக்க அருள்மொழிகளை ஸங்கீத கலாநிதி ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களின் இசையிலே கேட்டு மகிழ்கிறோம். முறையே அத்வைத, விசிஷ்டாத்வைத, த்வைத ஸம்பிரதாயங்களின் ஆசார்யர்களான ஸ்ரீ சங்கரர், ஸ்ரீராமானுஜர், ஸ்ரீமத்வர் ஆகிய மூவரது துதிகளையும் இதிலே கேட்டு மூவரும் பக்தியிலே பேதமற ஐக்கியமாயிருந்த அருமையை உணர்கிறோம்.



ஸ்ரீ சிருங்கேரி சாரதா பீடத்தின் பூர்வாசாரியர்களான ஜகத்குரு ஸ்ரீ ந்ருஸிம்ஹ பாரதி ஸ்வாமிகளின் வேங்கடேச்வர கராவலம்ப ஸ்தோத்ரத்துடன் இசைத்தட்டு தொடங்குகிறது. பிருந்தாவன ஸாரங்கா, மிச்ர பைரவி ராகங்களில் இசைக்கப்படும் இத்துதியில்; சமீப காலத்தே வாழ்ந்த ஒரு யதீச்வரரின் வாய்மொழியாக ஜீவாத்மா தன்னைக் கடைத்தேற்றுவதற்காக ஸ்ரீ வேங்கடேசப் பெருமாளிடம் பரம பக்தியில் கதறி முறையிடுவதைக் காண்கிறோம்.

இதைத் தொடர்ந்து ஸ்ரீ ஆதிசங்கர பகவத் பாதர்கள் அருளிய கனகதாராஸ்தவம் பூபாளி, மலயமாருதம், தர்மவதி ராகங்களிலும் திருமகளின் நூற்றியெட்டுத் திருநாமங்களின் தொகுப்பான லக்ஷ்மி அஷ்டோத்திரசதம் கல்யாணி, ஆரபி, அம்ருதவர்ஷிணி ராகங்களிலும் அமுதமெனப் பொழிகின்றன.

அடுத்து வரும் துர்கா பஞ்சரத்னம் அம்பிகையின் மீது ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதீச்வரர் ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் அருளியதாகும். அன்னை வழிபாட்டில் மிளிரும் அன்புப் பரவசத்தையும், ஆழ்ந்த கௌரவத்தையும் பிரதிபலிக்கும் வகையில் இத்துதி கர்நாடக சுத்த ஸாவேரியில் சுடர்விட்டு ஜ்வலிக்கிறது.

இசைத்தட்டின் இரண்டாம் பக்கம் ஆதி சங்கர பகவத் பாதர்களின் கோவிந்தாஷ்டகம் என்னும் கண்ணன் துதி பைரவி, பீலு, ஜெஞ்ஜுட்டி ராகங்களில் தொடங்குகிறது. கோவிந்தாஷ்டகத்தைப் பாடிப் பதிவு செய்யும்போது உடனிருந்த ஒரு புகழ் வாய்ந்த வடமொழி விற்பன்னர் உணர்ச்சி வசப்பட்டு "இந்த துதி மாத்திரம் அடிக்கடி நம் செவிகளில் கேட்டுக் கொண்டிருந்தால் போதும். சூரியன் முன் பனியாக நம்மைச் சுற்றியுள்ள பாபமும் தீமையும் நாமறியாமலே தேய்ந்து மறையும்." என்று கூறியது குறிப்பிடத்தக்கது.

கோவிந்தாஷ்டகத்தைத் தொடர்ந்து வருவது ஸ்ரீராமானுஜாசாரியர்கள் அருளிய ஸ்ரீரங்ககத்யம் வேத ஸூக்தங்களை ஓதும் பாணியில் கத்யம் மேலே செல்லச்செல்ல ஸ்தாயியையும் மேலே மேலே கொண்டுபோய் மாயாமாளவகௌளத்தின் அழகிலே முடிக்கும்போது கேட்கும் நீங்கள் மயிர்கூச்செறிந்து ஸ்ரீரங்கநாதரின் ஸந்நிதியிலே நிற்கும் பவித்திரமான உணர்வினைப் பெறுவீர்கள்.

இதன்பின் ஸ்ரீமத்வாசாரியர்கள் அருளிய த்வாதச ஸ்தோத்திரத்திலுள்ள தசாவதார ஸ்துதி இனிக்கும் திலங் ராகத்தில் இசையுருக் கொள்கிறது. ஸ்நானம் செய்து கொண்டிருக்கையில் ஸ்ரீமத்வருக்கு கண்ணனின் விக்ரஹம் கிடைக்க, அவர் அந்த ஆனந்த பரவசத்தில் ஆழ்ந்து "தேவகி நந்தனு! நந்த குமாரா!" எனக் கூவியழைத்து இத் துதியைத் தொடங்கினர். தசாவதாரங்களைப் போற்றும் இத்துதியில் முதலில் கண்ணனைக் கூவியழைத்துப் பின்னர் மற்ற அவதாரங்களைப் போற்றியிருப்பதற்கு இதுவே காரணம்.



ஸ்ரீ சைதன்ய மஹாப்ரபு அருளிய சிக்ஷாஷ்டகத்துடன் இசைத்தட்டு இனிது முடிகிறது. பூர்யா தனஸ்ரீ, தேஷ், ஹிந்துஸ்தானி தோடி ஆகிய ராகங்களில் உள்ளம் நெகிழ நெக்குருக கானம் செய்யப்படும் இந்த கீதம்,

"ஹரே ராம! ஹரே ராம! ராம ராம ஹரே ஹரே!
ஹரே கிருஷ்ண! ஹரே கிருஷ்ண! கிருஷ்ண கிருஷ்ண ஹரே ஹரே!"

என்னும் மஹா மந்திர நாமாவளியின் கோஷ்டி கானத்தில் பக்தியின் சிகரத்தை எய்துகிறது.

உயர் லக்ஷியங்களுக்கே அர்ப்பணமான தமது வாழ்வின் நிறைவு கொண்டு பாரதத்தில் அவதரித்த மஹாத்மாக்களுடைய அருட்துதிகளின் உன்னத ஜீவஸாரத்தை இந்த இசைத்தட்டில் பிழிந்தளித்திருக்கிறார் ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மி.




Exempt from Sales Tax in the State of Andhra Pradesh vide G. O. MS No 1159 REV (S) DEPT dated 17th Sep 1979.




THE GRAMOPHONE COMPANY OF INDIA LTD

4PRC 112-TAM







# கலைத்தம்பதியர்

## ஸ்ரீ தனஞ்சயன் ஸ்ரீமதி சாந்தா தனஞ்சயன்

உலக நாடுகள் பலவற்றிலும் இணைசேர்ந்து நடன நிகழ்ச்சிகள் வழங்கி வரும் தனஞ்சயனும் சாந்தாவும் ஒருவரையொருவர் மிகச் சிறு வயது முதலே அறிவார்கள்.

ஒன்ருகப் படித்து கலாக்ஷேத்ராவில் ஒன்ருக நடனம் பயின்று 1955 முதல் இன்றுவரை ஒன்ருகவே நடன நிகழ்ச்சிகள் அளித்து வரும் இவர்கள் வாழ்க்கையிலும் தம்பதியாக இணைந்ததில் வியப்பில்லை.

''எங்கள் நடன நிகழ்ச்சிகளுக்கு முன்னும் பின்னும் விரிவாக இருவரும் பேசுவோம். குறைகளைத் தவிர்க்க இது உதவுகிறது'' என்கிருர் தனஞ்சயன்.

''அபிப்பிராய பேதம் எதுவும் எங்களுக்குள் வருவதில்லை. எங்கள் எண்ணங்கள் ஒரே மாதிரியே இருப்பது காரணமாயிருக்கலாம்!'' என்கிருர் சாந்தா.

''சிருங்கார ரசம் மட்டும் பிரதானமாக அமைந்த பொழுது போக்கே நடனக் கலை என்று சில விமர்சகர்கள் சொல்கிருர்கள். நான் இதை ஏற்றுக் கொள்ள மாட்டேன். கல்லாதவர்க்கு அறிவும், கற்றவர்க்கு உயர் சிந்தனையும், உயர் சிந்தனை கொண்டவர்களுக்குச் சிறந்த ஒரு பொழுது போக்கும் நடனக் கலை அளிக்கிறது. காரணம் பக்தியே முக்கிய அம்சமாக இந்திய இசையிலும் நடனத்திலும் விளங்குகிறது. ஐந்தாவது வேதம் என்று கூட நடனக் கலையைச் சொல்லுகிருர்கள்!'' என்கிருர் தனஞ்சயன்.

## திரு டி. வி. சங்கரநாராயணன்—<br>திருமதி விஜயலக்ஷ்மி சங்கரநாராயணன்

''முழுக்க முழுக்க சங்கீதப் பரம்பரையில் (மாமா: மதுரை மணி ஐயர்) வளர்ந்து வந்ததால், சங்கீதத்தில் தேர்ச்சியுள்ள மனைவி தான் வரவேண்டும் என்ற எண்ணம் இருந்தது'' என்கிருர் டி. வி. சங்கரநாராயணன். அதற்கேற்ற மாதிரியே மனைவியாக அமைந்தார் ஸ்ரீமதி விஜயலக்ஷ்மி (தாய் வழி உறவு கூட)

கணவரைப் போல் மேடைக் கச்சேரி செய்து பிரபலம் ஆவதை விட, கற்ற வித்தையைப் பிறருக்குச் சொல்லிக் கொடுப்பதிலேயே மனைவிக்கு நாட்டம் உண்டு. (சென்னை பல்கலைக் கழக சங்கீதத் துறையில் விஸிட்டிங் லெக்சரர்) அகாடமி, தமிழிசை போன்ற கலை ஸ்தாபனங்களில் இவர் வாங்கிய பரிசுகளின் பட்டியல் நீண்டு கொண்டே போகிறது. இவற்றுக்கு முன்னல் இவர் பெற்ற பட்டம்: இசைத் துறையில் எம். ஏ.

1975-76ல் வெளி நாடு சென்று பாஸ்டன் கல்லூரியில் இசை வகுப்புக்களில் கலந்து



1· சாந்தா-தனஞ்செயன். 2. கே. பி. சிவானந்தம் சாரதா. சிவானந்தம். 3. சிவகுமார்-லலிதா சிவகுமார். 4. விஜயலக்ஷ்மி-சங்கர நாராயணன்.



வி.யிடமும் கற்றுக் கொண்டவர். ஸ்ரீமதி டி. கே. பட்டம்மாளிடம் தனியே நிட்சிதர் கிருதிகளைப் படித்தார்.

கிட்டத்தட்ட 'இரண்டு பேருமே ஜி.என்.பி. பாணியையே கடைப்பிடிக்கிறார்கள். ஆனால் தமக்கென்று ஒரு தனித்துவத்தைக் கையாளுகிறார்கள்.

''அவ்வப்போது சங்கீதம் சம்பந்தமான அபிப்பிராய பேதங்கள் நிகழ்வதுண்டோ?'' என்று கேட்கிறோம்.

''உண்டு; ஆனால் எங்கள் கல்விப் பின்னணி சரியான கோணத்தில் அவற்றைப்





5. சித்ரா-விசுவேசுவரன். 6. திருச்சூர் வி. ராமச்சந்திரன்-சாருமதி ராமச்சந்திரன். 7. நாராயண சாமி-பத்மா நாராயண சுவாமி.

கொள்ளச் சந்தர்ப்பம் கிடைத்ததை ஒரு பேறாகக் கருதுகிறார் சங்கர நாராயணன்.

''இரண்டு பேருமே சங்கீதத் துறையில் இருப்பதால் சர்ச்சை ஏதேனும் நிகழ்ந்ததுண்டா?''

கிடையாது என்கிறார் சங்கர நாராயணன். ''மாறாக, எண்ணங்களைப் பரிமாறிக்கொள்ளவும், பகிர்ந்து கொள்ளவும் சௌகரியமாயிருக்கிறது!''

இரண்டு பேருமே தங்களுக்குப் பிடித்த ராகமாகப் பைரவியைத்தான் குறிப்பிட்டனர். தற்போது, தஞ்சாவூர் சங்கரய்யர் தோற்றுவித்த விஷ்ணுப்ரியா ராகத்தைப் பிரபலப்படுத்தும் முயற்சியில் ஈடுபட்டுள்ளார் சங்கர நாராயணன். (ராகவர்த்தினி ஜன்யம்; சாருகேசியின் கிளை.)

### திருச்சூர் வி. ராமச்சந்திரன்
### சாருமதி ராமச்சந்திரன்

● ஒரே ஆண்டில் (1979) மியூசிக் அகாடமியின் பரிசு பெற்ற தம்பதி திருச்சூர் வி. ராமச்சந்திரன் – சாருமதி ராமச்சந்திரனாகத்தான் இருக்கக் கூடும்.

இள வயதில் வர்க்கலா சுப்பிரமணிய பாகவதரிடமும், ஸ்ரீ கிருஷ்ண அய்யரிடமும் பயிற்சி பெற்று, பின்னர் திரு ஜி.என்.பி. யிடம் சிட்சை பெற்றவர் ராமச்சந்திரன்.

சாருமதியோ துவக்கத்தில் ராமனாதபுரம் கிருஷ்ணனிடமும், பின்னர் எம்.எல்

புரிந்து கொண்டு ஆரோக்கியமான சர்ச்சை புரிய பெருவாக உதவுகிறது'' என்கிறார் ராமச்சந்திரன். அதை அப்படியே ஆமோதிக்கிறார் சாருமதி. ''கச்சேரிகளைப் பொருத்த மட்டில் என்னைவிடப் பல மடங்கு சீனியர் என் கணவர்!'' என்கிறார்.

''இருவரும் சேர்ந்து கச்சேரி செய்திருக்கிறார்களோ?''

''இல்லை. ஆனால் டி.வி.யில் சில சுலோகங்களைச் சேர்ந்து வழங்கியிருக்கிறோம். இதே போன்ற சுலோகங்களைப் பலரும் விரும்பிக் கேட்பதால் ஒருஎல்.பி. ரெகார்டு கொடுக்கும் எண்ணம் இருக்கிறது'' என்கிறார் சாருமதி.

''இள வயதில் குழந்தைகளுக்கு இந்தத் தூய இசைக் கலையைப் பெற்றோர் சிறிது சிறிதாக வழங்க முன்வர வேண்டும்!'' என்கிறார் ராமச்சந்திரன்.

### ஸ்ரீ விசுவேசுவரன்—
### ஸ்ரீமதி சித்ரா விசுவேசுவரன்

● சுத்தமான, நளினமான நாட்டியம் என்று விமர்சகர்கள் பாராட்டும் பரத நாட்டியக் கலைஞர் ஸ்ரீமதி சித்ரா விசுவேசுவரன்.

ஜி. என். பி.யின் இசைக் குடும்பத்தில் பிறந்து, ஸ்ரீ பிச்சுமணியிடம் வீணை பயின்று,

சிதார், வெஸ்டர்ன் கிளாசிகல் கிடார், 116 தந்திகள் கொண்ட சான்ட்டூர் என்று அனைத்தையும் அநாயாசமாகக் கையாளுகிறார் விசுவேசுவரன்.

பண்டிட் சிவகுமார் சர்மாவிடம் சான்டூர் வாத்தியம் கற்பதற்காகவே பம்பாய் போய் வருகிறார் விசுவேசுவரன். இசையமைப்பாளர் எம். எஸ். விசுவநாதன் குழுவில் பணியாற்றுகிறார். ('இத்தனை திறமைசாலியான, அடக்கமான இசையமைப்பாளரோடு பணியாற்றுவதை ஒரு பாக்கியமாகக் கருதுகிறேன்') சான்ட்டூர் வாத்தியத்தில் ஹிந்துஸ்தானி இசையையும், வீணையில் கர்நாடக இசையையும், கிடாரில் மேற்கத்திய சாஸ்திரீய இசையையும் இவரால் வாசிக்க முடிகிறது. இசையில் டிகிரிக்கு இணையான பட்டம் வாங்கியிருக்கிறார் லண்டன் ட்ரினிடி கல்லூரியிலிருந்து.

''காதல் திருமணம்தானே?''

''ஆமாம்'' என்கிறார் விசுவேசுவரன். ''எனக்கு மனைவியாக வருகிறவள் இசையில் ஈடுபாடு உள்ளவளாக இருக்க வேண்டும் என்று முன்பே முடிவு செய்திருந்தேன்!''

''எனது புதிய முயற்சியான தேவி அஷ்டரஸமாலிகா என்ற நாட்டியத்துக்கு இசை அமைத்துத் தந்திருப்பவர் என் கணவர் தான்!'' என்கிறார் சித்ரா.

''சித்ராவின் நாட்டியம் உற்சாகமும் பரவசமும் தருகிறது எனக்கு!'' என்கிறார் விசுவேசுவரன்.

கலர் ஃபோட்டோகிராஃபியிலும் நிபுணராக விளங்குகிறார் விசுவேசுவரன். ஸ்ரீமதி சித்ராவின் பல பாவங்களைப் புகைப்படங்களாக எடுத்து வைத்திருக்கிறார்.

### பாலக்காடு திரு கே. வி. நாராயணசுவாமி திருமதி பத்மா நாராயணசுவாமி

● குருவிடம் அபார பக்தி கொண்டவர்கள் இந்தத் தம்பதி. திரு அரியக்குடியை இதயபூர்வமாகத் தம் குருநாதர் என்று வாய்க்கு வாய் கே. வி. என். சொல்கிறார். என்றால், அவர் மனைவி பத்மா கணவரையே குருவாகக் கருதுகிறார். ('அவர் பாட்டைப் பற்றி அபிப்பிராயம் சொல்ல எனக்கு ஏது தகுதி?' என்றார் அடக்கமாக.) சிறு வயதில் தகப்பனார் தந்த ஆர்வத்தின் தூண்டுதலினால் கே. வி. என்.னிடமும், பின்னர் முசிரியிடமும் கற்றுக் கொண்டார் பத்மா. அந்தத் தொடர்பே பின்பு திரு நாராயணசுவாமியை மணக்கக் காரணமாக அமைந்தது.

அமெரிக்காவில் பெர்க்லியில், கிழக்கிந்தியக் கலைஞர்களுக்கென ஒரு தனி நிறுவனம் இருக்கிறது. அதன் அழைப்புக்கு இணங்கி இந்தத் தம்பதி வெளிநாடு சென்றபோது, அங்கே பெண்களுக்குத் தனியாக திருமதி பத்மா பயிற்றுவித்ததை டாக்டர் பிரௌன் மிகவும் பாராட்டி யிருக்கிறார்.

காஞ்சிப் பெரியவர்கள் வேண்டுகோளுக்கு இணங்க, திருப்பாவைப் பாடல்களுக்கு அரியக்குடி அவர்கள் மெட்டமைக்கும்போதும், மைசூர் மகாராஜாவின் விருந்தினராக அவரது அரண்மனையில் தங்கி, அருணாசலக் கவியின் ராமநாடகக் கீர்த்தனைகளுக்குக் குருநாதர் மெட்டமைக்கும்போதும், தாம் உடன் இருந்ததைத் தம் வாழ்நாளில் கிடைத்த ஓர் அரிய வாய்ப்பாகக் கருதுகிறார் திரு கே. வி. என்.

### ஸ்ரீ சிவகுமார், ஸ்ரீமதி லலிதா சிவகுமார்

● மனைவி ஸ்ரீமதி லலிதா பாடும் பாட்டுக்குத் தாளம் போடுவதென்ன, மிருதங்கமே வாசித்திருக்கிறார் ஸ்ரீ சிவகுமார். (ஸ்ரீமதி டி. கே. பட்டம்மாளின் குமாரர்) மனைவி ஸ்ரீமதி லலிதாவும் இசைக் குடும்பத்திலிருந்து வந்தவர் தான். (தகப்பனார் பாலக்காடு ஸ்ரீ மணி அய்யர்.)

''பலர் எனக்குக் குரு பாலக்காடு ஸ்ரீ மணி அய்யர் என்றே நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். அவர் எனக்கு மாமனார்தான்! என் குரு பாலக்காடு ஸ்ரீ குஞ்சுமணி'' என்றார் சிவகுமார்.

ஸ்ரீமதி டி. கே. பட்டம்மாளின் கச்சேரிகளின்போது, உடன் பாடியிருக்கிறார் ஸ்ரீமதி லலிதா. அப்போது அவர்களுக்குப் பக்க வாத்தியமாக மிருதங்கம் வாசித்திருக்கிறார் சிவகுமார். மனைவி ஸ்ரீமதி லலிதாவுக்குத் தனிக் கச்சேரிகளுக்கும் வாசித்திருக்கிறாராம்.

மேடை ஏறு முன் மனைவி என்னென்ன பாட்டுப் பாடப் போகிறார் என்பதைக்கூடக் கேட்பது கிடையாதாம். 'மேடையில் நாங்க ஒருவரை யொருவர் அறியாதவர் (Strangers) போலவே நடந்து கொள்வோம்' என்கிறார் சிவகுமார்.

### கே. பி. சிவானந்தம் - சாரதா சிவானந்தம்

● முதலில் திருக்கோகர்ணம் சுப்ரமணிய அய்யரிடமும், பிறகு திரு சிவானந்தத்திடமும் (1950) வீணை பயின்றவர் சாரதா. பின்னர் திரு சிவானந்தம் அவர்களையே மணந்து கொண்டார். தமது புதல்வர் சி. எஸ். நரசிம்மனின் உபநயனத்தின்போது, பத்திரிகையாளர் வி. ஆர். சீனிவாசன்தான் சாரதாவை முதல் கச்சேரி செய்ய வைத்தவர்.

1968ல் சங்கீத பூஷணம் பட்டம் பெற்றார் சிவானந்தம். அதன் பிறகு விருதுகள், பல ஆராய்ச்சிப்பணிகள். பல இசை நூல்களுக்குத் தொகுப்பாசிரியராக விளங்குகிறார் சிவானந்தம்.

''ஏழு தலைமுறையாகத் தொடர்ந்து சங்கீதம், நாட்டியம், மிருதங்கம் என்று இசை வழங்கும் குடும்பம் ஸ்ரீ சிவானந்தம் அவர்களுடையது ஒன்றாகத்தான் இருக்க முடியும்'' என்கிறார் ஸ்ரீமதி சாரதா. இருவருமாக இலங்கை சென்று வந்திருக்கிறார்கள். 1973ல் ஆஸ்திரேலியாவுக்குக் கலாசாரக் குழுவில் சென்றிருக்கிறார் ஸ்ரீமதி சாரதா.

ஸ்ரீ சிவானந்தம் இப்போது இலங்கை சுவாமி விபுலானந்தா இசை நடனக் கல்லூரியின் பிரின்ஸிபல் ஆக நியமனம் பெற்று இலங்கை செல்லவிருக்கிறார்.

''இதுவரை தனித் தனியாகக் கச்சேரி செய்ததே கிடையாது. இன்னொரு விசேஷம்: நாங்கள் இருவரும் சேர்ந்து வாசிக்கும்போது ஒரே வீணையாகத்தான் கேட்கும். இரட்டை வீணைகளாகவே தெரியாது!'' என்கின்றனர் சிவானந்தம் தம்பதி. பேட்டி: தமயந்தி



# கவிதை பாடும் கண்களுக்கு...

# ஐடெக்ஸ்

விழிகள் மொழிபேச ஐடெக்ஸ்

பெண்மை பளிச்சிட, இளமை எழில்
கொஞ்சிட, வனிதையர் வதனம்
கவர்ச்சி மிளிர்ந்து கண்கள்
களிநடம்புரிய ஐடெக்ஸ் கண்மை

சாஸ்திரீய முறையில் தயாராகும்
ஐடெக்ஸ் மை கண்களுக்கு
குளுமையூட்டி பாதுகாக்கிறது
எவ்வித தீங்கும் விளைவிக்காது

ஐடெக்ஸ் 38 ஆண்டுகளாக உங்கள்
நம்பிக்கையின் மகத்தான சின்னம்







அரவிந்த் லாபரடரீஸ் சென்னை 600 033

ஸ்தாபிதம் : 1942 **லலிதா பார்மஸி** போன் : 123

**கும்பகோணம்**

DRUG LICENCE No. 40 / 78

மத்திய அரசால் சட்டுத் தொகைக்கு அனுமதியளிக்கப்பட்டுள்ளது

எமது விசேஷத் தயாரிப்புக்கள் :

1. யெளவன ரசாயனம்
2. அச்வகந்தி ரசாயனம்
3. பூர்ண சந்திரோதயம்
4. ஸ்வர்ண மாலிக வஸந்தம்

**மிகச் சிறந்த டானிக்**

மேற்கண்ட எமது பிராஞ்சுகளிலும் கிடைக்கும்

1. லலிதா பார்மஸி, 52, மஹாதானத் தெரு, மாயூரம், போன் : 379
2. லலிதா பார்மஸி, 81, வடக்கு ரத வீதி, சிதம்பரம்
3. லலிதா பார்மஸி, 6, ரெங்கநாதன் தெரு, தியாகராயநகர், சென்னை - 600 017, போன் : 441454
4. லலிதா பார்மஸி, 60-B, கச்சேரி ரோடு, மயிலாப்பூர், சென்னை - 600 004, போன் : 73007

மற்றும் சிறந்த ஆயுர்வேத மருந்துகள் யாவும் கிடைக்கும்.

---

# மோகினி



மிக்ஸி தயாரிப்புகளிலே முற்றிலும் மாறுபட்டது




மூன்று சைஸ்களில் கிடைக்கிறது



IS:4250

# சீகோ

மாவரைக்கும் இயந்திரங்கள்

வெட் கிரைண்டர்







பலவித சைஸ்களிலும் கிடைக்கிறது

HSO

வியாபார விசாரணைகள் வரவேற்கப் படுகின்றன

**கோயமுத்தூர் எலெக்ட்ரிக் & இன்ஜினியரிங் கார்ப்பரேஷன்**

பழைய தபாலாபீஸ் ரோடு • கோயமுத்தூர்-641018 • போன்: 32509/32598

---



திண்டுக்கல் டாக்டர் N. சுப்பிரமணியம் அவர்களின் குமாரன், சிரஞ்சீவி S. சந்திர நாராயணனுக்கும், பழனி, டாக்டர் S. சங்கரராமன் அவர்களின் குமாரத்தி, சௌபாக்கியவதி S. சசிகலாவுக்கும், 27-10-80-ம் தேதியன்று பழனியில் வெகு சிறப்பாக திருமணம் நடந்தேறியது. திருமணத்திற்கு வந்து ஆசி வழங்கிய பந்துக்களுக்கும், தந்தி மூலம் வாழ்த்து வழங்கியவர்களுக்கும், நண்பர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.



# வனவாசம்

## கண்ணதாசன்

### 5. கண்மணி தென்றல்



ஒரு தவறு பல தவறுகளுக்குக் காரண மாகிவிட்டது. பசும்பொன் தேவர் மகன் சொன்ன கதை போல, குடித்து, கற்பழித்துக் குழந்தையைக் கொன்ற நிலைதான்.

ஒருவன் குடிக்காமல் இருந்திருந்தால் கற்பழித்திருக்க மாட்டான். அந்த முயற்சியில் ஈடுபடாமல் இருந்திருந்தால் குழந்தையைக் கொன்றிருக்க மாட்டான்.

ஒரு வளையத்தைப் பிடித்துக்கொண்டு மறு வளையத்தில் தொங்குவதுதானே சங்கிலி?

அவன் கதையும் அதுதான்.

அரசியலில் ஈடுபட்டதால், தேர்தலில் ஈடுபட்டான்; தேர்தலில் தோல்வியுற்றதால், முதலில் குடிக்கத் தொடங்கினான்; இரண்டு வேளையும் நிச்சிந்தையாகக் குடிக்க விரும்பியதால், பர்மிட் தேவைப்பட்டது.

ஆசைக்கு வெட்கம் ஏது?

அப்போது உள்துறை அமைச்சராக இருந்த கக்கன் அவர்களைப் போய்ப் பார்த்தான்.

கக்கன் உத்தமமானவர், நேர்மையானவர்; மற்றவர்களும் நேர்மையாக வாழ வேண்டும் என்று ஆசைப்படுபவர். கோடிக் கணக்கில் பணம் புழங்கிய இடத்தில் இருந்தும், அதில் ஒரு காசைக்கூட அபகரிக்காதவர், அனுபவிக்காதவர்.

''பர்மிட்டா? ஐயையோ! உடம்பு கெட்டுப்போகுமே?'' என்றார்.

''இப்போது என்ன வாழுகிறது?'' என்றான் அவன்.

''பர்மிட் இருந்தால் அந்தத் தைரியத்தில் அதிகம் குடிப்பீர்களே... இந்த முயற்சியை விட்டுவிடுங்களேன்...,'' என்று கெஞ்சினார் அவர்.

அவன் அதையாவது கேட்டானா?

''தி. மு. க.வினர் என்னைக் காட்டிக் கொடுத்துவிடுவார்கள்'' என்று ஒரே பல்லவியைப் பாடினான். அந்தப் பல்லவியும் ராகமும் அவருக்குக்கூடப் பிடித்து விட்டன. மூன்றே நாட்களில் அவனுக்கு 'இரண்டு யூனிட் பர்மிட்' கொடுத்து விட்டார்.

''இரண்டு யூனிட்' என்றால் எப்போதும் இரண்டு பாட்டில்கள் கையிலேயே வைத்திருக்கலாம்.

பர்மிட் வந்த அன்று அவன் அதை ஒரு விழாவாகவே கொண்டாடினான். வீட்டுக்கு வெளியிலேயே நாற்காலியைப் போட்டுக் கொண்டு குடிக்க ஆரம்பித்தான்.

இனி யார் அவனை என்ன செய்ய முடியும்? அவன் வருஷத்தில் ஒரு நாள் குடித்துக் கொண்டிருந்தபோதே அந்தப் பெயர் வந்து விட்டது. குடித்துவிட்டுப் பேர் வாங்குகிற உலகத்தில் பேர் வாங்கிக் கொண்டு குடித்தவன் அவன் ஒருவன்தான்.

இழந்துபோன சொத்துக்களெல்லாம் மீட்கப்பட்டதுபோல அன்று அவனுக்குத் தோன்றிற்று. இது பேதைமை என்பது அவனுக்குப் புரியவில்லையே!

அழிவு என்பது உற்சாகமாகத்தான் ஆரம்பமாகும். 'வரவறிந்து செலவிடாதவன் வாழ்க்கை, இருப்பது போல் இல்லாமல் போய்விடும்' என்றானே வள்ளுவன்!

தவறு எப்போது உற்சாகமாகிறதோ அப்போதே பல தவறுகளுக்கு அது காரணமாகி விடுகிறது.

ஒரு பக்கம் 'தென்றல்' நடந்து கொண்டிருந்தது. ஒரு பக்கம் ஏராளமான பாடல்கள்! கடன், மது, மங்கை!

அந்தத் 'தென்றல்' பத்திரிகையை அவன் உயிராக நேசித்தான். சிறைச்சாலையில் இருந்து திரும்பியதும் அவன் துவக்கிய தென்றல்தான் அவன் சிறந்த எழுத்தாளன் என்

# அபூர்வ விஷயம்!

சங்கீதத்தில் ஈடுபாடு மட்டுமே உள்ள குடும்பத்தைப் பற்றிக் கேள்விப் பட்டிருப் போம். ஆனால் குடும்பத்தில் பெற்றோர், பெண்கள், பிள்ளை என்று எல்லோருமே சங் கீதத்தில் பற்றும் பயிற்சியும் உள்ளவர்களாக இருப்பது அபூர்வம் இல்லையோ?

காரைக்குடி மணியின் சீடரான இளைஞர் சியாம்சுந்தர் நிறையக் கச்சேரிகளில் மிரு தங்கம் வாசிப்பதைக் கேட்டிருக்கலாம். வாய் பாட்டுக் கற்றுக்கொண்ட இவர் தாயார் நன்றாகப் பாடுவார். தகப்பனார் புல்லாங் குழலை எடுத்து ஆலாபனை செய்தால் கேட்டுக் கொண்டே இருக்கலாம். இவர் தமக்கைகள் இருவரும் முறையாக நாட்டியம் பயின்ற வர்கள். தங்கை வயலின் வாசிக்கிறார்!

திரு சியாம் சுந்தர் அசோக் லேலண்டில் பிளானிங் இன்ஜினியராகப் பணியாற்று கிறார். —விசுவம்



பதைக் காட்டத் தொடங்கிற்று. அதற்கு முன்னால் அவனது எழுத்துத் திறமையைக் கருணாநிதி மட்டுமே அறிவார். தென்றல் அவனை நாடெங்கும் அறிமுகப்படுத்தியது.

சாதாரணமாகவா, புரட்சிகரமாக அறி முகப்படுத்தியது. கட்சியிலே அதுதான் பெரிய பரபரப்பு. ஒவ்வொரு வாரமும் தென் றலை வாங்கக் காத்துக் கொண்டிருக்கிற வர்கள் பலர். தென்றலிலே எழுதிக் கொண் டிருந்தவர்களிலே பலர் இன்று ஐ. ஏ. எஸ். அதிகாரிகளாகவும், நீதிபதிகளாகவும், மந் திரிகளாகவும் வெளி நாடுகளில் உத்தியோகம் பார்ப்பவர்களாகவும் இருக்கிறார்கள்.

நூற்றுக் கணக்கான கவிஞர்களையும் எழுத் தாளர்களையும் அது தயார் செய்தது.

கடுமையான இலக்கணத்தைக் கொண்ட வெண்பாவை நூற்றுக் கணக்கான கல்லூரி மாணவர்கள் எழுதத் தொடங்கினார்கள்.

அந்த ஆயுதத்தை அவன் முறையாகப் பயன்படுத்தவில்லை. பொறுப்பற்ற முறையில் பலபேரைத் தாக்கி எழுதினான். அவனுடைய் பேனாவுக்கு யாரும் தப்பவில்லை.

யார் யார் அவனைப் புகழ்ந்து கொண் டிருந்தார்களோ, அவர்களை யெல்லாம் கூடக் கண்மூடித்தனமாகத் தாக்கித் தொலைத்து விட்டான்.

தி. மு. க.விலேயே அழகான அச்சமைப் போடு வெளிவந்த முதல் பத்திரிகை அது தான்.

அதற்குப் போட்டியாக இருந்த 'முர சொலி' தேதி தவறாமல் வெளிவந்தது. ஆனால் 'தென்றல்' இஷ்டம்போல் வெளிவந்தது. இருப்பினும் தென்றலுக்கு இருந்த இலக்கிய மரியாதை முரசொலிக்கு இல்லை. முர சொலிக்கு இருந்த அரசியல் மரியாதை தென் றலுக்கு இல்லை.

கீழ்மட்டத் தொண்டர்களிடம் முரசொலி செல்வாக்குப் பெற்றது. கல்லூரிகளுக்குள் 'தென்றல்' புகுந்து விளையாடிற்று. சொல் லப்போனால் கல்லூரி மாணவர்களிடையே கழகத்துக்குச் செல்வாக்கு ஏற்படுத்தியதே அண்ணாவின் 'திராவிட நாடும்' 'தென்ற லு'ம்தான்.

அப்போதெல்லாம் கல்லூரி மாணவர்கள் அண்ணா, நெடுஞ்செழியன், அன்பழகன், கண்ணதாசன் ஆகிய நால்வரையும்தான் பேசக் கூப்பிடுவார்கள்.

எந்தப் பத்திரிகைக்கும் எழுதாத புரட்சிக் கவிஞர் தென்றலுக்கு எழுதினார்.

தென்றல் போட்டி நடத்திப் பரிசுகள் கொடுத்தது. அதில் நாவலருக்கு முதல் பரிசு பெற்ற மாணவர்தான் இன்றைய தமிழகத் தலைவர்களில் ஒருவரான ப. நெடுமாறன். மற்றொருவர் நாக. சண்முகம்.

தென்றலில் முக்கிய பங்கு கொண்ட உதவி ஆசிரியர், தமிழ்ப் பித்தன், ஒரு கவிதை யின் மூலம் தென்றலில் வேலையில் அமர்ந் தவர். இன்று தமிழக அரசாங்கத்தின் 'தமிழரசு' பத்திரிகையில் முக்கிய பொறுப் பில் இருக்கிறார்.

அதிகபட்சம் இருபதினாயிரம் பிரதிகளை வெளிவந்த தென்றல், இந்தியாவில் எந்தப் பத்திரிகையும் கிளப்பாத சூறாவளியைப் பலதடவை கிளப்பிற்று.

'கண்ணகி பத்தினியல்ல' என்று பேரா சிரியர் வெ. சுப்பிரமணிய ஆச்சாரியார் எப்போதோ சொன்னார் என்று கேள்விப் பட்டு, அவன் மடத்தனமாக அவரைத் தாக்கி எழுதிவிட்டான். ஆனால் அவர்தான் கல்லூரியில் தென்றலைப் புகழ்ந்து பேசுகிற வராம்!

அண்ணாவைப் பேச விடவில்லை என்று ஒரு தடவை பன்மொழிப் புலவர் தெ. பொ. மீ.யைக் கடுமையாகத் தாக்கிவிட்டான்.

அவனது பேனாவில் அதிகம் சிக்கித் திணறி யவர்கள் திரு ம. பொ. சி.யும், திரு காம ராஜரும்.

இனம் தெரியாமல், தரம் தெரியாமல் சில இதழ்களில் அவன் எழுதினாலும் ஆயிரக் கணக்கானவர்கள் தென்றலைப் பொக்கிஷ மாகச் சேகரித்தார்கள்.

இன்றும் கல்கத்தாவிலும் மலேஷியாவிலும், சிங்கப்பூரிலும், தமிழகத்திலும் 'தென்றல்' வால்யூம்கள் பத்திரமாகக் காக்கப்படுகின்றன.

எல்லாம் நன்றாக இருக்க வேண்டிய நேரம். ஆனால் எல்லாவற்றையும் தவறாக ஆக்கிற்று விதி.

இல்லையென்றால் அந்தத் தென்றல் ஒன்று போதுமே இன்று அவன் புகழைப் பாட!

வருமானம் குறைவாக வந்தபோது அதற்கே கொட்டிச் செலவழித்த அவன், அதை ஒழுங்காகவாவது கவனித்தானா? யார் யாரிடமோ ஒப்படைத்தான். அதன் நிர்வாகத்தில் வேலை செய்த பலபேர் நன்றாகத் திருடினார்கள். உதவி ஆசிரியர்கள் சிலபேர் அவனையும் அவமானப்படுத்தி, தங்களுக்கும் புகழ் தேடிக் கொண்டார்கள்.

ஒன்பது வருஷங்கள் நஷ்டக் கணக்கிலேயே ஓடிக் கொண்டிருந்தது தென்றல்.

கருணாநிதியின் 'முரசொலிக்கு'ப் பக்கத்திலேயே அவனும் ஒரு கட்டடத்தை வாடகைக்கு எடுத்திருந்தான். கருணாநிதி தாம் இருந்த கட்டிடத்தையே விலைக்கு வாங்கி விட்டார். அவன் வாங்கக் கூடிய வசதி இருந்தும் அலட்சியத்தால் விட்டு விட்டான்.

தொழில் பற்றிய எந்தவித அறிவும் இல்லாமல், அவன் எல்லாத் தொழில்களையும் செய்திருக்கிறான். பொம்மை செய்வதாக நினைத்துக் களிமண்ணைக் கையிலே எடுத்து, அதை உடம்பிலே பூசிக் கொண்டிருக்கிறான்.

'நுண்ணிய நூல் பல கற்றினும் மற்றும் தன் உண்மை அறிவே மிகும்' என்றானே வள்ளுவன்!

அவன் செய்யும் ஒவ்வொரு காரியத்தையும் உலகம் வியந்து நோக்கும். ஆனால் அதைப் பாதியிலேயே போட்டு உடைத்து விடுவான்.

தென்றலை மட்டும் அவன் பத்திரமாகக் காப்பாற்ற விரும்பினான்.

எந்தத் தென்றல் 1954ல் இருந்து 60வரை அண்ணாவின் புகழ் பாடி, 'அண்ணா நாற்பது', 'கடற் கரையில் அண்ணா' என்றெல்லாம் எழுதிக் கொண்டிருந்ததோ, அதே தென்றல் 1961ல் அண்ணாவை விமர்சனம் செய்யத் தொடங்கிற்று. அவனது எழுத்துக்களில் முரண்பாடு ஆரம்பமானது அதிலேதான்.

---

"பட்டி மன்றத்திலே நேத்திக்கு ஒரே அமளி!"

"எதுக்கு அமளிஞங்களாம்?"

"துணி [illegible] ஆண்களா, பெண்களா கூற விவாதம் [illegible]"

- ஜி. நடராஜன்



கழகத்திலிருந்து விலகுவதற்கு முன்னாலேயே கருணாநிதியை 'கோயபல்ஸ்' என்றும், அண்ணாவை 'கோயபல்ஸின் குருநாதர்' என்றும் அது வருணித்திருந்தது. விலகிய பிற்பாடு வெகு வேகமாகத் தாக்கத் தொடங்கிற்று. அதனால் பத்திரிகையின் விற்பனை பாதிக்கப் படவில்லை. கழகத்துக்குப் பதிலாக காங்கிரஸ்காரர்கள் வாங்குவதற்குத் தலைப்பட்டார்கள்.

காமராஜரைத் 'தற்குறி' என்று எழுதிய அவனது பேனாவே 'காமராஜர் தாலாட்டு'ம் எழுதிற்று. இந்த வகையில் மக்களின் ஞாபக மறதி, அவனுக்குப் பெரும் உதவியாக இருந்தது. தான் முரண்படுவது பற்றி அவன் கொஞ்சம்கூடக் கவலைப்படவில்லை. காரணம், எவனது வாழ்விலும் முரண்பாடு தவிர்க்க முடியாததுஎன்பதுஅவனது கருத்து.

'அல்லா அல்லா', 'முருகா முருகா', 'ஓம் சக்தி ஓம் சக்தி' என்றெழுதிய பாரதி "ஒரு நாள் ஆயிரம் தெய்வங்கள் உண்டென்று தேடி அலையும் அறிவிலிகாள்!" என்று பாடவில்லையா?

வடலூரர் வள்ளலார் ராமலிங்க அடிகளார் தமது 'திருமுறை'களிலேயே முரண்படவில்லையா?

ஆதி சங்கரரும், சுவாமி விவேகானந்தரும் கூட முரண்பாட்டுக்குத் தப்பவில்லையே?

முரண்பாடு என்பது பரிணாம வளர்ச்சியின் ஒரு கட்டமே. அவனைப் பொறுத்தவரை, கழகத்திலிருந்து விலகியதும் ஒரு வளர்ச்சியே!

அண்ணா அவனது எழுத்துக்களில் கலக்க முற்றிருக்கிறார் என்று சொல்லக் கேள்விப் பட்டான். அடிக்கடி அவரைப் பற்றிய சலனமும், சபலமும் அவனுள் எழும். ஆனாலும் த. தே. க. நண்பர்கள் அதை மாற்றிவிடுவார்கள்.

அந்தத் தென்றலைத் தேர்தலுக்காக அவன் 'தினசரி'யாகவும் மாற்றியிருந்தான். வாரா வாரம் நஷ்டப்பட்டால் போதாது; நாள் தோறும் நஷ்டப்பட வேண்டுமல்லவா!

அப்போது அவன் படத்தொழிலில் மும்முரமாக இருந்ததால், அதைத் தான் நடத்தாமல், இலவசமாக ஒருவரிடம் கொடுத்து நடத்துவதற்கு ஐயாயிரம் ரூபாய் ரொக்கமும் கொடுத்திருந்தான்.

[அந்த ஐயாயிரத்துக்கு கோர்ட்டில் வழக்குப் போட்டு 'டிகிரி' ஆகி பதினேழு வருஷங்கள் ஆகின்றன.]

எந்தத் தென்றலுக்காக இவ்வளவு தியாகம் செய்தானோ, அந்தத் தென்றலுக்கு ஒரு சோதனை வந்தது.

அவனுக்கும் தமிழகத்தின் பத்திரிகைப் பெரும் புள்ளி ஒருவருக்கும் நீண்ட நாளாகவே தகராறு இருந்து வந்தது. அவர் அவனையும், த. தே. க.வையுமே விலைக்கு வாங்க விரும்பினார். அது பலிக்காமற் போகவே தென்றலை வாங்கி அழித்துவிட விரும்பினார்.

அந்த ரகசியம் அவனுக்குத் தெரியாது.

ஒரு நாள் தென்றல் அலுவலகத்துக்குள் பத்திரிகைப் புள்ளியின் ஆட்கள் நுழைந்தார்கள்.

தேர்தலில் தோற்ற பிறகு இரண்டாவது அதிர்ச்சி இது. (வளரும்)

# சிரிப் இசை!




எப்படி பாட்டு! இவர் சங்கீதம் கேட்டால் ஸப்த ஜ்வரங்களும் வந்தாலும் வரும்!



ஒண்ணுமில்லே! தனி ஆவர்த்தனத்தின் போது பக்க வாத்தியக்காராளுக்குள்ளே ஏக ரகளை சண்டை!... அதான் போலீஸ் நிக்குது!



மிருதங்க வித்வான்: காண்டீனுக்குப் போய் மிருதங்கத்துக்குக் கொடு சம் ... வை ... ண்டாரணும்

ஜலதரங்க வித்வான்: அப்படியே எனக்கு ரெண்டு மூணு கிண்ணம் கொண்டாங்க! எனக்குக் கிண்ணம் குறையுது!



"பாடகி சுருதியோடு சேர மாட்டேங்கறாரே!"

"சுருதி போடறவர் அவருடைய கணவராச்சே! எப்படி சேரும்?"



முதல் கச்சேரியிலேயே இந்த இளம் பாடகர் இவ்வளவு முன்னுக்கு வந்துட்டாரே!



வயலின் வித்வான் பெயர் அர்ச்சுனன்! அதான் 'வில்' அப்படி இருக்கு!



பாட்டுக் கச்சேரியில் தனி ஆவர்த்தனத்தின் போது கடத்தைத் தூக்கிப் போட்டுப் பிடிக்கிறுங் களே; மேளக் கச்சேரியில் நானும் புதுமையைப் புகுத்தறேன் பாருங்க!



"கடைசி நாள் சபாவிலே என் கச்சேரி! சம்மானம் வாங்கினதும் உம்ம கணக்கைத் தீர்த்துடறேன்! அது வரை என் பில்லைக் கணக்கு எழுதிக்குங்கோ!"




"வித்வான்! 'டெமான்ஸ்ட்ரேஷன்' அங்கே நடக்குது! நீர் இங்கே நிக்கறீரே!"

"இது மாத்திரம் என்னவாம்? இதுவும் டெமான்ஸ்ட்ரேஷன் தான்!"



"வித்வான் சார்! ஒரு தலை ராகம் பாடுங்கோ!"



வித்வான்: அந்தக் காலத்திலே சங்கீதத்துக்கு என்ன மதிப்பு! ராகத்தை அடகு வைச்சுப் பணம் வாங்கினுங்க. இப்ப....

பண்டாரம்: இப்பவும் நான் பணம் கடன் கொடுக்கிறேன்! ஒட்டு மொத்தமாக எல்லா ராகங்களுக்கும் சேர்த்து ஒரு தொகை சொல்லுங்க!

# புதியது! DUNLOP

# G.180 NYLON

## அதிக பட்ச கேஸிங் பயனை உறுதியாக அளிக்கும் மிகவும் நம்பக்கூடிய தன்மையுள்ள கேஸிங்

புதிய ஜி 180 நைலான் அதிகபட்ச ரீட்ரெட்டுகளை அளிப்பதற்கென பிரத்தியேகமாக உருவாக்கப்பட்ட தனிச்சிறப்புள்ள 14PR நைலான் கேஸிங்குடன் கூடிய டிரக் டயர். இதனால் நீங்கள் ரீட்ரெட் செய்யாவிட்டாலும், உன்னதமான ஜி 180 கேஸிங்கினால் உயர்ந்த கேஸிங் பயனை அடைவீர்.

அதோடு கூட ஜி 180 அளிக்கும் புதிய கரடு முரடான ட்ரெட் பாட்டர்ன், அத்துடன் இணையான ஓட்டத்தைத்தரும் ரப்பர் காம்பௌண்ட் ஆகியவைகளின் காரணமாக ஒரே சீரான அதிக ஆரம்ப மைலேஜ் உறுதியளிக்கப்படுகிறது.

புதிய ஜி 180 நைலான் அதிகபட்ச ரீட்ரெட்கள், அதிக ஆரம்ப மைலேஜ் — ஆகியவைகளுக்கென பிரத்தியேகமாக உருவாக்கப்பட்டது. சுருக்கமாகச் சொல்லப்போனால் ஒரு கிலோ மீட்டருக்கு ஆகும் செலவு குறைகிறது!

**உன்னத இயக்கத்திற்கு அசல் டன்லப் புதிய ட்யூபுகள் மற்றும் ஃப்ளாபுகளை உபயோகியுங்கள். அத்துடன் குறைந்த பட்ச நீளும்தன்மை அதிகபட்ச ஆயுளுக்கு டன்லப் மாக்ஸ் லைஃப் பாலியெஸ்டர் கார்ட் ஃபான் பெல்ட் உபயோகியுங்கள்.**

**DUNLOP**

சிறந்ததை வாங்கிடுவீர், வாங்கிடுவீர் டன்லப் டயர்

DT/CAS-3/80 TAM

போட்டிக் கதை: 15

# வேதனையில் ஓர் இதயம்

'வி. உஷா'



"ஏய் நித்யா! காலங் கார்த்தாலே என்னடி புக்கை வெச்சுண்டு எழவைக் கொட்டிக்கிறே? தோய்ச்ச துணியெல்லாம் காயப் போடேன். கை என்ன தேஞ்சா போச்சு?" அம்மாவின் கட்டைக் குரல் சமையல் அறையைத் தாண்டி டைனிங் ஹாலைத் தொட்டு, ஹாலைக் கடந்து முன்னறையை முத்தமிட்டு, அங்கு உட்கார்ந்திருந்த நித்யாவின் காதில் ஆணியாய் இறங்கியது.

"என்ன நித்யா இது? எத்தனை தடவை சொன்னாலும் உனக்குப் புரியவே இல்லையே? என் காட்டன் ஸாரீஸ் எல்லாத்தையும் அயர்ன் பண்ணி வைன்னு எத்தனை கத்தல் கத்தியிருக்கேன்? ஆபீசுக்குப் போறவளாச் சேன்னு கொஞ்சம் கூடத் தெரியலையே!" உலகிலேயே தான்தான் வேலைக்குப் போகிறோம் என்ற எண்ணத்துடன் மன்னி நர்மதா கத்தினாள்.

"ரொம்ப மோசம் இவள். பௌடர் தீர்ந்து போச்சுன்னு நேத்திக்கே தெரியும் இல்லையா? வாங்கி வைக்கவேண்டியதுதானே? மூளைங்கிறது மருந்துக்குக்கூட இல்லை போலிருக்கு" அண்ணா முரளி கத்தினான்.

எல்லோரும் பேசும்போது தன் பங்குக்குத் தானும் ஏதாவது சொல்ல வேண்டும் என்ற எண்ணத்துடன் விநுக் குட்டி கத்தியது. "ஏன் ஆன்டி? என்னோட சாக்ஸை ஏன் நீ தோய்க்கலே?"

எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டு ஸ்லோ மோஷனில் எழுந்தாள் நித்யா.

இவையெல்லாம் பழக்கப்பட்ட சமாசாரங்கள். தினமும் அர்ச்சிக்கப்படும் வார்த்தைகள். தவறாமல் எய்யப்படும் சொல்லம்புகள். நிச்சயம் குத்தப்படும் வசை முட்கள், கட்டாயம் திணிக்கப்படும் எட்டிக் காய்கள்.

எல்லாம் சேர்ந்து மனசின் மத்தியில் நெருஞ்சி முள்ளாய்க் குத்த, அந்த வலி கண்ணில் நீராய் வெளிவந்தது.

யாருக்கும் அவளைப் பிடிக்காது. ஆனால் அவள் தொண்டு, அவள் பணம் அனைத்தும் அனைவருக்கும் தேவை.

மாடிக்குச் சென்று துணிகளைக் காயப் போட்டாள்.

மன்னியின் புடவைகளை அயர்ன் பண்ணினாள்.

வேலைக்காரப் பையனிடம் காசுகொடுத்துப் பௌடர் வாங்கி வர அனுப்பினாள்.

விநுக்குட்டியின் சாக்ஸைத் தோய்த்துப் போட்டாள்.

தட்டை எடுத்துப் போட்டுக் கொண்டு பழையதைப் பிழிந்து வைத்துக் கொண்டு உப்பும் மோரும் விட்டுக் கொண்டு மாவடு ஒன்றைத் தொட்டுக்கொண்டு 'கடகட'வென சாப்பிட்டாள். அம்மா—வார்த்து வைத்திருந்த வெண்ணிலா தோசை மூன்றை டிபன் பாக்ஸில் அடைத்துக் கொண்டாள்.

பழைய நைலக்ஸ் புடவையும் அதற்குக் கொஞ்சமும் பொருத்தமில்லாத ஜாக்கெட்டும் அணிந்து கொண்டாள், மானத்தை மறைக்க மட்டுமே.

புறப்பட்டாள். எல்லோருக்கும் பொதுவாக ஒரு ''போயிட்டு வரேன்.''

ஆபீசில் நுழையும்போது அட்டெண்டன்ஸ் ரிஜிஸ்டர் மானேஜரிடம் போய்விட்டிருந்தது.

ஐந்து நிமிஷம் லேட்டானால் கூட நாய் போல் குரைக்கும் அவன், இருபது நிமிடத்துக்கு என்ன சொல்வான்? புலியாய்ப் பாய்வானோ?

உள்ளே போனாள்.

''டோன்ட் யூ ஹாவ் எனி சென்ஸ் ஆஃப் ஷேம்? அடிக்கடி இப்படி லேட்டாய் வந்தா என்ன அர்த்தம்? திஸ் மஸ்ட் பீ த லாஸ்ட் டைம். அதர்வைஸ் ஐ வில் டேக் ஆக்ஷன்'' பேப்பர் வெயிட்டைக் கையால் சுழற்றியபடி பேசினான் அவன். கொஞ்சம் போனால் அதைத் தூக்கி முகத்திலே அடித்து விடுவான் போல் இருந்தது.

''எஸ் ஸார்!'' எந்த உணர்ச்சியும் தெரியவில்லை நித்யாவின் குரலில்.

வெளியில் வந்து சீட்டில் உட்கார்ந்தாள்.

ஒரு அருவருப்பான பிராணியைப் பார்ப்பது போல் வெறுப்பைக் கொட்டும் பார்வையுடன் டெஸ்பாட்ச் மணி—

பார்க்கக் கூடாத காட்சியைப் பார்த்துவிட்டது போல் முகத்தைச் சட்டென்று திருப்பிக்கொள்ளும் காஷியர் மாதவன்—

அழகான இந்த ஆபீசுக்கு ஏற்படும் திருஷ்டியைப் போக்கத்தான் ஒரு பரிகாரமாய் உன்னை வைத்திருக்கிறார்கள் என்று கண்ணாலேயே சொல்லும் ஸ்டெனோ சங்கரன்.

நித்யா தலையைக் குனிந்தபடி வேலையில் ஆழ்ந்தாள். இல்லை, ஆழ முயன்றாள். முடியாமல் கண்ணில் நீரூற்றுகள்.

'என்னை யாரும் பரிவாக, பாசமாக ஒரு பார்வை பார்க்க மாட்டார்களா? கேவலம் கொஞ்ச நாளில் தேய்ந்து போகும் வெளி அழகை மதிக்காமல், வெள்ளைப் பளிங்காய் பாலாய் இருக்கும் என் மன அழகை மதிக்க, அதன் நிஜ ரூபத்தை உணர்ந்து போற்ற, நொந்து போயிருக்கும் உள்ளத்தைத் தன் அன்புச் சிறகால் வருட யாராவது கிடைப்பார்களா?'

கிடைத்தான் மதன்.

மறுநாள் வழக்கம் போல் அலுவலகத்தினுள் நுழைந்த நித்யாவை ஆச்சரியப்பட, அதிசயப்பட, ஆனந்தப்பட வைத்து விட்டான் மதன்.

மேடம், மிஸ் நித்யாவாகி, வெறும் நித்யா ஆனது போல், நீங்கள் என்பது நீ ஆகும் அளவுக்கு நெருக்கம் வளர்ந்து விட்டது.

நினைத்து, நினைத்து மாய்ந்து மகிழ்ந்து போனாள் அவள்.

நம்பவே முடியவில்லை நித்யாவால்.

''எப்படி இது சாத்தியமாயிற்று மதன்? அலை அலையாகச் சுருண்ட தலை முடியும், குறுகுறுவென்ற முகமும், நல்ல உயரமும் வாய் நிறைந்த குறும்புப் பேச்சும் கொண்ட



நாலு மணிக்கச்சேரி தான் உனக்கு எப்பவும் ரசிக்க முடியுதுங்கறயே அது ஏன்?''

''அப்பத்தான் கான்டீன்லே எல்லாம் சூடாக் கிடைக்குது!''

கே. ஆர். எம்.

அவனருகில் நிற்கக்கூட யோக்கியதை இருக்கா எனக்கு? எல்லோரும் கரித்துக் கொட்டும் என்னிடம் சிரித்துப் பேச உன்னால் எப்படி முடிகிறது? நிஜம் தானா இது? அவனுடைய பரிவுதான் எனக்கு எவ்வளவு சக்தியைக் கொடுக்கிறது. டானிக் சாப்பிட்ட மாதிரி? உண்மையா இது?'

துணிந்து கேட்டு விட்டாள் அவனிடம்.

''வெளியில் தெரியும் அழகு சாசுவதமில்லை என்ற நிஜம் ரொம்பப் பேருக்குப் புரிவதில்லை நித்யா. அது ஏதோ கவர்ன்மெண்ட் வேலை மாதிரி நிச்சயமான — எப்போவும் இருக்கிற — ஒன்று என்று நினைத்துக்கொண்டிருக்கிறார்கள். பட், எனக்கு இந்த அழகு, அலங்காரம் இதிலெல்லாம் இஷ்டமில்லை. அழகானவர்களை எப்படியெல்லாம் மதிக்கிறோமோ, அதே போல் அழகில்லாதவர்களையும் நடத்த வேண்டும். அவர்களுடைய மனநிலை எப்படி இருக்கும் என்று ஒரு முறை அவர்களாகவே மானசீகமாய் மாறி நின்று பார்க்க வேண்டும். இயற்கையின் சிருஷ்டிக்கு அவர்கள் எப்படிப் பொறுப்பேற்க முடியும்? அவர்களுடைய தப்பில்லையே அது? எல்லோருக்கும் இருக்கும் ஆசைகள், கனவுகள், கற்பனைகள் அவர்களுக்கும் இருக்கும் இல்லையா? உன் தாழ்வு மனப்பான்மையை விட்டுத் தைரியமாக இரு. உனக்கும் ஒருவனை இதய சிம்மாசனத்திலே அமர வைக்கும் தகுதி இருக்கு!''

நெகிழ்ந்து, உருகிப் பாகானாள் அவள். அவனுடைய ஒவ்வொரு வார்த்தையும் மலராய் இதயத்தைத் தொட்டது. மெல்ல வருடியது. மணம் பரப்பியது.

''அந்த அதிருஷ்டசாலி நானாக இருக்க முடியுமா நித்யா?'' தலையைக் குனிந்தபடி அவன் கேட்டது அவளை வான சமுத்திரத்தில் நீச்சலடிக்கச் செய்தது.

அந்தக் கேள்வி தந்த அதிகப்படியான ஆனந்தம், அதிர்ச்சி இவற்றைத் தாங்க முடியாதவளாய் அழுகை வந்தது. ஆனந்த அழுகை.

மதன் பதறிப்போனான்.

''ஏன் நித்யா? நான் தப்பாப் பேசிட்டேனா?''

''அய்யோ இல்லை மதன். எனக்கு அதற்கெல்லாம் தகுதியோ, உரிமையோ இல்லை.''

''பார்த்தியா? அந்தக் காம்ப்ளெக்ஸ் உங்கிட்ட இருக்கக் கூடாதுன்னு இப்பத்தானே சொன்னேன்? சரி. உன் பதில் என்ன? அதைச் சொல்.''

''கடவுள் சிலைக்குப் போடறதுக்குக் கூட சில மலர்கள்தான் கொடுத்து வச்சிருக்கு. வாசனை இல்லாத மலர்கள் வெளில இருந்துதான் தெய்வத்தைப் பார்க்க முடியுமே தவிர, அதன் அருகே கூடப் போக முடியாது. அப்படிப்பட்ட பாதை ஓரத்து மலர்தான்

# இரண்டே வருடங்களில் விற்பனையில் முதல் இடம்

# JOHNSON®

## மிக்ஸர் கிரைண்டர்

25 வருடத்திற்கு மேற்பட்ட அனுபவமும், இந்தியாவிலே சமையலறைச் சாதனங்களில் ஏராளமான வகைகளும் கொண்ட ஜான்சனின் சீரிய படைப்பு ஜான்சன் மிக்ஸர் — கிரைண்டர். எங்கெங்கும் அறிமுகப் படுத்தினுலும் ஐயமின்றி தலை சிறந்ததென இரண்டே வருடங்களில் பீடு நடை போடுகிறது.

ஏன் எனக் கேட்பின் :

---

இலவசம்! தனி எவர்சில்வர் கிண்ணம்! உலர்ந்த அரவைக்கென தனியான எவர்சில்வர் கிண்ணமிருப்பதால் மசாலாக்களின் மணமும், ருசியும் மில்க் ஷேக்குகளில கலக்காமல் பாதுகாப்பு அளிக்கிறது.



---



அதிக சுகாதாரம் பாகங்களை எளிதாக கழட்டும்படி தயாரிக்கப் பட்டிருப்பதால் நீங்கள் துப்புரவாகக் கழுவ முடிகிறது. உணவுப் பண்டங்களின் துகள்கள் உள்ளே நின்று விடும் சந்தர்ப்பம் இல்லை.

---

முழுமையான பாதுகாப்பு. பிளேட் பாகங்கள் இரு கிண்ணங்களிலும் உறுதியாக இணைக்கப் பட்டிருப்பதால் இயக்கத் தில் பிளேட் பறந்து விடாமல் பாதுகாப்பு அளிக்கிறது.



---



கன ரக ஓட்டம் அதிக உறுதியான 450 வாட் மோட்டார் நமது இந்திய சமையலுக்கென்றே சிறப்பாக அமைக்கப் பட்டிருக்கிறது. 45 நிமிடங்கள் நிறுத்தாமல், தடையின்று ஓட்டலாம்.

---

மற்ற சிறப்பு அம்சங்கள்:

- மோட்டார் குளிர்ச்சியாக இருப்பதற்கென தனியான காற்றோட்டம்
- சீரிய கலவை மற்றும் அரவைக்கென மேம்படுத்தப்பட்ட பிளெட் அமைப்பு
- ஒரு வேகத்திலிருந்து மற்றொரு வேகத்திற்கு செம்மையாக மாற்ற இஞ்சர் ஸ்விட்ச்
- ஒரு வருடத்திற்கு உத்திரவாதம் ஜான்சன்

**JOHNSON®**

## இயக்கத்திலும், ஆற்றலிலும் இணையிலாச் சிறப்பு கொண்டது

ASP-SE-8001A

MCA-NTC-65-TAM

# புடவைகள்

தினப்படி உபயோகிக்கும் பருத்தி புடவைகள். துல்லியமாக நெய்யப்பட்ட பாலியஸ்டர் மற்றும் பாலியஸ்டர் கலப்பிழை புடவைகள். உங்கள் மனதிற்கேற்ற வகையில்

**Entyce**

**என்டைஸ்**

சிறந்த ரகங்கள்.
சரியான விலை.

**நேஷனல் டெக்ஸ்டைல் கார்ப்பொரேஷன்**



(தமிழ்நாடு மற்றும் பாண்டிச்சேரி) லிமிடெட்
ஒரு மத்திய அரசு நிறுவனம்
கோயம்புத்தூர்-641009

இன்டென்டிங் ஏஜண்டுகள்: (தமிழ் நாடு மற்றும் பாண்டிச்சேரி) ஜே ஜே எண்டர்ப்ரைசஸ், 14/F1 அனசாரி தெரு, ராம்நகர், கோயமுத்தூர் 9 • செமி ஹோல்சேல் டிப்போ: மத்திய விநியோக டிப்போ, CS & W மில்ஸ் காம்பவுண்டு, கோயமுத்தூர் 1 • என்டைஸ் செமிஹோல்சேல் டிப்போ, 208 தம்பு செட்டித் தெரு சென்னை 1 • என்டைஸ் ஷோரூம்கள்: என்டிசி ஹவுஸ், கோயமுத்தூர் 9 • 'சரவண பவனம்' கிராஸ்கட் ரோடு, கோயமுத்தூர் 12 • என்டைஸ் துணிகள் எல்லா என்டிசி ஷோரூம்களிலும் கிடைக்கின்றது.

நான்". கட்டுப்படுத்த முடியாமல் விம்மினாள் நித்யா.

"ஸ்டாப் இட் நித்யா. என்ன வியாக்யானம் இது? நீ வாசனை இல்லாத பூவும் இல்லை, நான் கடவுளும் இல்லை. ஒரே வார்த்தையில் பதில் சொல்லு. உனக்கு இஷ்டமா, இல்லையா?"

யோசிப்பதற்கு இதில் என்ன இருக்கிறது என்று தோன்றியது நித்யாவுக்கு. திடீரென்று வீட்டு ஞாபகம். அம்மா, அண்ணா, மன்னி, அக்காக்கள் இவர்களின் கோபமான கொடூரமான முகங்கள் பயமுறுத்தின. 'உன்னைப் போய் ஒருத்தன் காதலிக்கிறானே' என்று சிரித்தன.

தீர்மானமாகச் சொன்னாள் நித்யா "எஸ் மதன். ஐ லவ் யூ."

கண்கள் பனிக்க அவள் கையைப் பற்றினான் அவன்.

அன்று ஏதோ முகூர்த்த நாள் போலிருக்கிறது. பஸ்ஸில் ரொம்பக் கூட்டம். நின்றபடிதான் பயணம் செய்ய வேண்டியிருந்தது.

அன்று காலை நடந்த சாதாரண விஷயத்துக்காக அம்மாவும் மன்னியும் பேசிய பேச்சுக்கள்!

ஒன்றும் பெரிய விஷயமில்லை.. வினுக்குட்டிக்கு ஹாலில் தலை வாரிக் கொண்டிருந்த அம்மா அப்போதுதான் குளித்து விட்டு வந்திருந்த நித்யாவிடம் சாதத்தைப் பார்க்கச் சொன்னாள்.

'தளதள'வென்று கொதித்துக் கொண்டிருந்த அரிசியைக் கிளறினாள் நித்யா. என்ன வேளையோ, பாத்திரம் அப்படியே கவிழ்ந்து விட்டது. கையெல்லாம் கஞ்சி.

ஓடோடி வந்தாள் அம்மா. "அடிப் பாவி! என்னிக்காவது ஒரு நாள் சமையலறையில விட்டா இப்படியா? தரித்திரம். நீ போனாத்தான் இந்த வீடு உருப்படும். இப்ப சாதத்துக்கு என்ன பண்ணுவேன்?"

"வேலைக்குப் போறோம்கிற திமிர். வீட்டில சாப்பாடு இல்லேன்னா என்ன, வெளில ஹோட்டல் இருக்கேன்னு அலட்சியம்!" கால் வலி என்று பொய்ச் சாக்கில் லீவில் இருக்கும் மன்னியின் வார்த்தை சாட்டைகள்.

சாப்பிடாமலேயே வேகமாகப் பஸ்ஸில் ஆபீசுக்கு வந்து சேர்ந்தாள். ஆபீசில் நுழைந்து, வழக்கமான பார்வைகளைச் சந்தித்துச் சகித்துக் கொண்டு சீட்டில் உட்கார்ந்து, அம்மாவின் ஏச்சுக்களை மறந்து, கைக்குட்டையால் முகத்தை ஒற்றிக்கொண்டு வேலையை ஆரம்பித்தபோது....

உற்சாகமாய் வந்தான் மதன்.

"ஹாய் நித்யா! இப்போ நான் சொல்றதுக்கெல்லாம் ஏன், எதுக்குன்னு கேட்காம தலை ஆட்டணும். என்ன? மத்தியானம் ஹாஃப் டே லீவு போடறே. நானும்தான். மாட்னி ஷோ 'டெத் டைமன்ஷன்' போறோம். ஈவினிங் ட்ரைவ் இன். ஆறு மணிக்கு எங்க வீடு. அம்மாவுக்கு எதிர்கால மருமகளை இன்ட்ரட்யூஸ் பண்ணப் போறேன். ஓ.கே.?"

அவனுடைய சந்தோஷ வெள்ளத்தை எந்த அணையாலும் கட்டுப்படுத்த முடியாது என்று தோன்றியது அவளுக்கு. வெட்கத்துடன் தலையசைத்தாள்.



**இன்று சாந்தம்; நாளை கோபம்!**

இன்று, ஒருகோபத்தை மறந்து சமரசம் செய்து கொள்ளுங்கள். அல்லது மறக்கப்பட்ட ஒரு நண்பரைத் தேடிக் கண்டுபிடியுங்கள். அல்லது ஏதேனும் ஓர் அரிய பொருளைப் பகிர்ந்து கொள்ளுங்கள். அல்லது ஒரு வாக்குறுதியை நிறைவேற்றுங்கள். அல்லது ஒரு தவறுக்காக மன்னிப்புக் கோருங்கள். அல்லது ஒரு குழந்தையின் உள்ளத்திற்குக் களிப்பூட்டுங்கள். -யாரோ

-வி. ச. வாசுதேவன்

---

இதெல்லாம் வீட்டுக்குத் தெரிந்தால்...?

தெரியத்தானே போகிறது ஒரு நாள். மதன் மட்டும் அருகிருந்தால் எந்தப் புயலையும் சமாளிக்கலாமே?

திட்டப்படி எல்லாம் நடந்தது.

ட்ரைவ் இன்னிலிருந்து நேராய் அவனுடைய வீட்டுக்குப் போனார்கள்.

காதல் என்ற வார்த்தை சாதாரணமான பெண்ணைக்கூட ஓரளவு முருள்ளவளாய் ஆக்கிவிடும் என்பதற்கு உதாரணமாய் இருந்தாள் அவள்.

வீடு நிசப்தமாயிருந்தது

"அம்மா எங்கே போய்விட்டாள்?" தனக்குத்தானே கேட்டுக் கொண்டவனாய் அவள் கையைப் பற்றிக் கொண்டு உள்ளே அழைத்துச் சென்றான்.

டேபிள் மீது ஒரு கடித மாதிரி தெரிந்தது மதனுக்கு.

'பக்கத்து வீட்டு மாலுவுக்கு வலி எடுத்து ஆஸ்பத்திரிக்குப் போகிறார்கள். உதவிக்கு நானும் போக வேண்டி வந்து விட்டது. மருமகளைக் கோபப்பட வேண்டாம் என்று சொல் — அம்மா.'

"அம்மாவிடம் சொல்லியாகி விட்டதா?" கறுப்பு முகம் கூட வெட்கத்தில் சிவந்தது லேசாய்.

"எல்லாத்தையும்." குறும்புடன் சொன்னான்.

"சரி வா. விருந்தாளியை நானே கவனிக்கிறேன். மொதல்ல வீட்டைச் சுற்றிக் காட்டறேன்."

சுற்றினார்கள்.

பெரிய வீடுதான்.

இப்படிப்பட்ட இடத்துக்கு வரத்தான் ரொம்பக் கொடுத்து வைத்திருக்க வேண்டும். அன்பான மாமியார், ஆசைக் கணவன் வசதியான வீடு, நாத்தனார், மச்சினர் யாரும் இல்லாத ஏகாந்த சூழ்நிலை...

இதற்கெல்லாம் அருகதை உண்டா எனக்கு?

சட்டென்று அவன் கையைப் பற்றிக் கொண்டு தோளில் சாய்ந்துவிட்டாள் நித்யா. எதிர்பாராமல் அவள் நடந்துகொண்ட முறையில் உருகிப்போனான் மதன்.

இரு கைகளாலும் அவளை அணைத்தான். கோழிக் குஞ்சாய் அந்த அணைப்பில் அடங்கினாள் அவள்.

அவளிடமிருந்து எதிர்ப்பு ஒன்றும் வராதது அவனுக்கு இன்பமாய் இருந்ததோ? அவளைத் தூக்கிக் கொண்டு பெட்ரூமுக்குச் சென்றான். இல்லை, கால்கள் சென்றன.

நிமிஷங்கள் உதிர்ந்தன.

முதலில் தப்பை உணர்ந்தவள் நித்யா தான். நிலைமையின் விபரீதங்கள் நெஞ்சைத் தாக்க, "அய்யோ! என்ன காரியம் செய்து விட்டோம் மதன்?" ஓவென்று அழ ஆரம்பித்தாள்.

அதிர்ந்துதான் போனான் அவன். "உணர்ச்சி வசப்பட்டதிலே ஒண்ணும் தெரியலேம்மா. பரவாயில்லே, நான் கைவிட்டுடுவேன்னுதானே பயப்படறே? அப்படிப் பட்டவனில்லே நித்யா கவலைப்படாதே."

அவன் என்னவெல்லாமோ பேசியும் அவள் சமாதானமடையவில்லை. விம்மிக்கொண்டிருந்தாள் ரொம்ப நேரம்...

மதன் மாறவேயில்லை.

நிலத்தைக் குத்தகைக்கு விடுவதற்காக அவன் அம்மா ஊருக்குப் போயிருந்தாள். அவள் வந்தவுடனேயே கல்யாணம்தான்.

இரண்டு மாதமாகியும் அவள் வராமல் போகவே, கடிதம் எழுதினான் ஊருக்கு. இரண்டே நாளில் பதில் வந்து விட்டது அம்மாவுக்கு உடம்பு சரியில்லையென்றும், உடனே அவன் புறப்பட்டு வர வேண்டும் என்றும். நித்யாவிடம் தைரியமாக இருக்கும்படி சொல்லிவிட்டுப் பறந்தான் அவன்.

நித்யா பயந்து கொண்டிருந்தாள்.

அவள் பயந்து கொண்டிருந்தது நடந்து விட்டது. குட்டி மதன் அவள் வயிற்றில் உருவாகி விட்டான்.

முகம் வெளிற, காய்ச்சலில் கிடந்தவள் போலானாள் அவள். இந்தச் சமயத்தில் மதனும் இல்லையே? எப்போதுதான் வருவான் மதன்?

அன்று. அவள் தலையில் எழுதப்பட்ட எழுத்துக்கள் கறுப்பு மையால் எழுதப் பட்டவை போலும். வழக்கம் போல் மதன் வந்துவிட்டானா என்ற ஆசைக் கேள்வியுடன் அவன் சீட்டைப் பார்த்தாள். காலி.

ஏமாற்றத்துடன் திரும்பியவளைத் தடுத்து இழுத்தது மாதவனின் குரல். "என்ன மேடம்? விஷயம் தெரியுமா? நம்ப மதன் திடீர்னு ஹார்ட் அட்டாக்கில் போயிட்டானாம். தந்தி வந்திருக்கு."

துடிக்கும் நெஞ்சைக் கைகளால் அழுத்திக் கொண்டாள் அவள். இதயத்தை யாரோ கசக்கிப் பிழிந்தார்கள்.

மனம் புலம்பியது. "மதன்? இப்படிப் போய்விட்டீர்களே? குருடனுக்கு ஒரு நிமிஷம் பார்வை வந்துட்டுப் போன மாதிரி, இனிமேல்? நானும் வந்துடறேன், உங்க பின்னாலேயே."

மனசின் இன்னொரு மூலையிலிருந்து இன்னொரு குரல்.

"நித்யா! நீ இப்போ ஓர் உயிர் இல்லே, இன்னொரு சின்ன உயிரையும் சுமந்துண்டு இருக்கே. அது மதனோட பிரதிபிம்பம், மறுபதிப்பு. அதை அழிக்க உனக்கு உரிமை கிடையாது. அதற்காகவாவது நீ வாழணும்."

தீர்மானத்துடன் எழுந்தாள் நித்யா.

எரிமலை வெடித்தது வீட்டில்.

விரல் நுனிகளில் வலி ஏற்படும்வரை அவளை அடித்தார்கள் அண்ணாவும் அம்மாவும்.

"அடி சண்டாளி! இந்த மாதிரி பண்ணணுமனு எத்தனை நாள் காத்துக் கொண்டிருந்தே? பீடை. நீ ஒழிஞ்சு போடி."

"அவனுக்காகத்தான் மினுக்கிக்கொண்டு போனாளாக்கும்? இப்போ என்ன செய்யப் போறாளாம்? 'வாழ்வே மாயம்னு' பாடப் போறாளா?" அதே கிண்டலுடன் நர்மதா.

"மதன்! ஓ....மதன்!

உங்களுக்காக உங்கள் குழந்தைக்காக, என்ன அடியையும், என்ன அவமானங்களையும் இட்டுக்களையும் ஏற்றுக் கொள்ளத் தயாராகிவிட்டேன். ஏற்கனவே நான் இதையெல்லாம் கேட்டு அனுபவித்தவள்தானே? இப்போது புதிதாய் ஒரு வேதனை —உங்களைப் பிரிந்த வேதனை — சேர்ந்து விட்டது. பரவாயில்லை. சமாளிக்கத்தான் போகிறேன்.

நித்யாவுக்கு ஆறுவது மாதம்.

மினி மதன் வயிற்றில் கிரிக்கெட் ஆட, அதை மானசீகமாக ரசித்தபடி ஆபீசுக்குக் கிளம்புகிறாள் அவள்.

வழக்கம்போல் சாதாரணமான உடை. கறுப்புப் பொட்டு நெற்றியில். சின்னதாய்க் கொண்டை தலையில். வலது கை வெறுமையாய் இருக்க, இடது கையில் சிறிய வாட்ச்.

அவ்வளவுதான் அலங்காரம்.

வழக்கம்போல் அம்மாவின் இடக்குப் பேச்சு. அண்ணாவின் அலட்சியப் போக்கு; மன்னியின் கிண்டலான ஏச்சு.

எல்லாவற்றையும் தன் தாய் மொழியான மௌன பாஷையால் அலட்சியப்படுத்தி, ஒரு கர்ம வீரனைப் போல், ஒரு யோகியைப் போல் நடக்கிறாள் இவள்.

மனசில் இரும்புப் பாரமாய் சுமைகள் தங்க, "நான் மதனின் விதவை. அவர் குழந்தை என்னிடம் வளர்கிறது" என்று இறுமாப்புடன் சொல்வது போல் கம்பீரமாக எல்லோரையும் பார்க்கிறாள். இந்த உலகமே அவளுக்குக் கால் தூசு இப்போது.

---

மணி: "இன்னிக்கு எங்க அப்பாகிட்டே ஒரு சவால் விட்டேன்.. அவரு தோத்துட்டாரு!"

கிட்டு: "அப்படியா? என்ன சவால்?"

மணி: "கண்ணை மூடிக்கிட்டே ஒரு காரியம் செய்ய முடியுமான்னு கேட்டேன், முடியாதுன்னுட்டார்!"

கிட்டு: "என்ன காரியம்?"

மணி: "என் பிராக்ரஸ் ரிப்போர்ட்லே கையெழுத்து போடறதுதான்!" - ஜி. நடராஜன்



# லக்மே வதன ரேகா

மினுக்காத மென்வண்ண இயற்கைப் பொலிவுக்கு லக்மே முகப் பவுடர்—இழைக்கிறாள் ரேகா, பட்டுச் சல்லாத் துணிவழியே சலித்தெடுத்த பனி மகரந்தம்: லக்மே முகப்பவுடர்... உறைக்கும் ஸ்டுடியோ விளக்கொளியிலும் மலர்ச்சியோடு ஜொலிக்குது. வெளிப்புற ஷூட்டிங்கா—விரலசைவில் விருக்கென ரேகாவுக்குக் களைகட்டுவது லக்மே காம்பேக்ட். சிங்காரச் சிற்றடக்கச் சிமிழ், நங்கையர் கைப் பைக்குள் நைஸாகப் பொருந்தும். ரேகா முக ராசி வாகாய் உமக்கும் வாய்த்திட, வரவேற்பீர் லக்மே.

**லக்மே அல்ட்ரா-சில்க் முகப் பவுடர் மற்றும் லக்மே காம்பேக்ட்**



**எழிலைப் படைப்போர்—லக்மே**

# Lakmé

daCunha L-53R TM

மார்கழி மாதத்தில் ஒரு நாள். உஷத் காலம். நங்கநல்லூரில் அத்வானத்தில் முளைத்த ஒரு நகரில் ஒரே கு...கு...குளிர். தெருவுக்கு ஒன்றாக உள்ள ஆலயங்கள் திருப்பாவை, திருவெம்பாவை, திருவிளையாடல் போன்ற அருள்மிகு தட்டுக்களை நிமிஷத்துக்கு முப்பத்து மூன்று சொச்ச ரெளண்டுகளாகச் சுழல விட்டு, சமய சன்மார்க்கத்தை ஒலிபரப்ப, பொழுது விடியத் தொடங்குகிறது.

பனிமூட்டம் இன்னும் விலகவில்லை. ஒட்டகச் சிவிங்கிக் குட்டிகள் சற்றே கால்களை அகட்டி, குனிந்து தழைகளைத் தின்னும் போஸில், மஞ்சள் பூசிய மேலாக்கு சுந்தரிகள் கோலம் போட்டுக் கொண்டு இருக்கிறார்கள். 'ஹிண்டு' இன்னும் வரவில்லை. ரிடையர்டு வாசிகளின் குறட்டை சன்னமாக ஒலிக்கிறது.

இதுதான் சங்கீத வித்வான் சின்னக்குடி சாமிநாதன் வீடு. சிமெண்ட் இல்லாமல் மாடி பாதியில் நிற்கிறது. பில்டரில் புதிதாக இறக்கப்பட்ட காப்பி டிகாக்ஷனின் சுகந்தமும், தாராளமாக நெய் விட்டுக் கிளறிய வெண் பொங்கல் மணமும் போட்டி போட்டுக் கொண்டு நம்மைத் தாண்டிச் செல்கின்றன.

சின்னக்குடி எழுந்துவிட்டார். இன்னும் பல் தேய்க்கவில்லை. சரீரமும் சாரீரம் போல் நல்ல கனம். நியமப்படி இத்தனை நேரம் சாதகத்தை ஆரம்பித்து இருக்க வேண்டும். ஆனால் இல்லை.

''ஏம்பா? உடம்பு சரியா இல்லையா?'' கேட்டுக் கொண்டே வருவது அவருடைய பெண் மைதிலி. அழகை வர்ணிக்கக் காளியுடைய தாசனோ, கண்ணனுடைய தாசனோ வரவேண்டும்.

ராத்திரி மொட்டை மாடியில் சத்குரு ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளின் பலுக வேமி நாதை (ராகம் பூர்ணி சந்திரிகா. தாளம் ஆதி. மேளகர்த்தா 29) கிருதியை ஒரு கை பார்த்துக்கொண்டு இருக்கும்போது கடைவாயில் ஆரம்பித்த வலி!

''பல்வலி. ஹும்! தாங்க முடியவில்லை.''

''அப்போ பொங்கலுக்கு முந்திரிப் பருப்பு போடலேப்பா. மத்தியான மிளகு வடையும் கான்சல்ட். உங்களால் கடிக்க முடியாதே''

சின்னக்குடி பல்லைக் கடிக்கிறார். ''மூந்திரிக்கும் வடைக்கும் என்ன அவசரம்? இன்னும் நாலு நாளில் கச்சேரி. இப்போ பார்த்து இந்தச் சனியன்.''

''ஐயோ! மறந்தே போய் விட்டேனே. ரேடியோ கச்சேரியா யிருந்தாலும் பரவாயில்லே. டி. வி.யில் இசை அரங்காச்சே. ரொம்ப வலிக்கிறதா அப்பா?''

''உயிர் போறது. கிராம்பு தைலம் இருந்தால் தேவலே. உள்ளே அந்தக் கப்போர்டில் இருந்ததே?''

''அது கிராம்புத் தைலம் இல்லேப்பா. கிராப்புத் தைலம்! சேகர் வாங்கியிருக்கான். நல்லா வளருமாம்!''

''முட்டி வரை வளர்க்கப் போகிறானா? அவனைக் கட்டிப் போட்டு ஒரு நாள் ஒட்ட வெட்டி விடணும். அவன் சக்தி அவன் கிராப்பில் இருக்காம். அபத்தம். அவன் சாமிநாதன் சன்னா? ஸாம்சன்னானு பார்த்திடறேன்... ஆ....ஆ....வலி....''

''பல் டாக்டர் கிட்டே போய்க் காண்பிச்சுட்டு வாங்கோப்பா.''

''ஒண்ணு ரெண்டுன்னு ஆரம்பிச்சு எல்லாப் பல்லையும் பிடுங்குன்னு சொல்வார்.''

''சொத்தைன்னா எடுத்துத் தானே ஆகணும்?''

''என்னுடைய சங்கீதச் சொத்தை ஒன்னும் செய்யாமல் பல்லைப் பிடுங்கினால் சரி.''

''வேணும்னா பல் செட் கட்டிண்டாப் போறது.''

''சரிதான். பக்கவாத்திய செட்டோடு பல் செட்டையும் கச்சேரிக்கு எடுத்துண்டு போகணும். அந்தக் காலத்திலே குருகுல வாசம் செய்த வித்யார்த்திகள் வேஷ்டி புடவை தோய்த்துப் போடுவார்கள். தொடுவார்களா இப்போ இருக்கிற என் சிஷ்யர்கள் என் பல் செட்டை!''

''என் ஆபீஸ் பக்கத்திலே ஒரு பல் டாக்டர் இருக்கார். நாளைக்குப் போகலாமா?''

''ஹூம் போகலாம். ப்ரோல பாரமா ரகுராமா!''

ஜெயித்துக் கொண்டே இருப்பேன் என்று சவால் விட்டு எதிர்பாராமல் குத்து வாங்கிய முகமது அலியின் தள்ளாடிய நடையுடன் தாடையைப் பிடித்துக் கொண்டு பாத்ரூம் போகிறார்.

மாலை. எக்மோரில் மூன்று நட்...

# ராகம் தானம் பல்வலி!

ஜே.எஸ்.ராகவன்



ஓட்டல் அறை இருட்டில் அதோ உட்கார்ந்து இருப்பது மைதிலி; டென்டிஸ்ட் ரகு ராமன்.

''எப்படியாவது அப்பாவை நீங்கள் குணப்படுத்தணும். 'இம்ப்ரெஸ்' செய்யணும். இது தான் நல்ல சான்ஸ்!''

'சல்லா' பேப்பரில் பாக் செய்த பாதாம் அல்வாவைத் தொடாமல் அவளையே பார்த்துக்கொண்டு இருக்கிறான் ரகு ராமன்.

''ரைட், மைதிலி. ஆனால் நான் நாளைக்கு ஈரோடு போகணுமே.''

''அப்படியா? மத்த நாட்களில் வெளியே போகும்போது ஈறைக் கழட்டி வைத்து விட்டுக் கிளம்புவீங்களா?''

''சிலேடை பேசாதவர்களைச் சல்லடை போட்டுத் தேடினாலும் கிடைக்க மாட்டார்கள் போலிருக்கு. சரி. டிரிப்பைக் கான்சல் செய்து விடுகிறேன். காதலியின் அப்பாவின் பல்லை



சபா காரியதரிசி: ''... பாகவதர் கிட்டேயிருந்து சீட்டு வந்திருக்கு சார்...''

நண்பர்: ''என்னன்னு?''

சபா: ''காண்டீன் மசால் வடை ஒரு பிளேட் பார்சல் வேணுமாம்!.. தீர்ந்து போயிடறதுக்குள்ளே!

-ஜி. நடராஜன்

ஒரு கை பார்த்துவிடுகிறேன். பீஸ் தருவாரா?''

''தானம் கொடுத்த பசு மாட்டின் பல்லைப் பார்க்கக் கூடாது. டாக்டர், ஏதோ எங்க அப்பா கிட்டப் பேச ஒரு சான்ஸ் கொடுக்கலாம்னு பார்த்தா....''

''உங்கப்பா! 'தானம்' பாடும் பசுமாடு! பல்லையும் பார்க்கலாம். பீஸ் இல்லாவிட்டாலும் அவர் சம்மதத்தைக் கறந்துவிடுகிறேன். ரைட்?''

''அப்பா பல்லைச் சரிசெய்யணுமே தவிர உடைக்கக் கூடாது.''

''ஏன்? ஏன்? ஏன்னேன்? ராமர் கூட ஜனகரின் கல்லை... சீச்சீ... வில்லை உடைத்துத்தானே மைதிலியின் அழகிய கையை இப்படிப் பிடித்தார். உன் அப்பாவிடம் வில் இல்லை, பல் இருக்கு.''

''பிரமாதம். சரி சரி கையை விடுங்கள். அப்புறம் சாஸ்திரிகள் சொன்னவுடன் பிடிக்கலாம். ஆனால் ஞாபகம் இருக்கட்டும். எங்கப்பாவுக்குக் கர்நாடக சங்கீதம்னா உயிர். மூச்சு, பிராணன், ஜீவன், லைஃப் எல்லாம். அவர் வாயில் பஞ்சை அடைத்து விட்டு நீங்கள் சங்கீதத்தைப் பற்றி உளறக்கூடாது.''

''ஆஹா! உங்க அப்பா என்ன சங்கர சாஸ்திரியா? எனக்கா சங்கீத ஞானம் இல்லே? கேட்டுக்கொள் பெண்ணே. சங்கராபரணத்தை நாலு தடவை பார்த்தேனாக்கும்.''

''எதுக்காக? சங்கர சாஸ்திரிக்காகவா? மஞ்சு பார்கவிக்காகவா?''

''அதெல்லாம் பட்னு அப்படிக் கேட்டு விடக் கூடாது. எனக்கும் சில சங்கீத பரிபாஷைகள் தெரியும். ஒரு தடவை மியூஸிக் அகாடமியில் காபி அல்வா லேட் ஆகும்னு காண்டீனில் சொன்னபோது உள்ளே 'சதஸ்' கூடப் போயிருக்கேன்.''

''நிஜமாகவா?''

''ஆமாம். காந்தாரம், நிஷாதம், பஞ்சமம், விசித்ராங்கம், வாக்கிங்காரர்கள்...''

''கர்மம்! வாக்கேயகாரர்கள்.''

''ஏதோ ஒண்ணு. சமாளிக்கிறேன். உங்கப்பா வித்வான்தானே? ம்யூசிகாலஜிஸ்ட் இல்லையே பயமுறுத்த.''

''எனக்கென்னவோ பயமா யிருக்கு. சங்கீதமும், பல் வைத்தியமும் ஒண்ணுசேருமா?''

''ஏன் சேராது? இரண்டும் வாய் சம்பந்தப்பட்ட விஷயங்கள்தானே? ஆமாம். கொஞ்சம் சிரியேன். சீரியஸா இருக்கியே. என்னைப் பார்த்து எவ்வளவு பெண்கள் பல்லைக் காட்டுகிறார்கள் தெரியுமா?''

மறுநாள் மத்தியானம் சின்னக்குடி ஆட்டோவிலிருந்து இறங்கி வீட்டுக்குள் நுழைகிறார், கைகத்தாங்கலாக சேகர் அழைத்துப் போகிறான்.

''என்னப்பா இவ்வளவு சீக்கிரமா வந்துட்டேளே? என்ன சொன்னார் டாக்டர்?''

சின்னக்குடியின் சுருதி இறங்கவில்லை.

''பிரமாதம்மா. அந்த டாக்டர் கொஞ்சம்கூட வலியில்லாமல் ஈரப் பாத்தியிலிருந்து முள்ளங்கியைப் பிடுங்குவது போல் சுலபமாகப் பல்லை எடுத்துவிட்டார். இப்போ சௌகர்யமாக இருக்கு. கம்பீரமா நாட்டையிலே ஒரு சங்கதியை எடுத்து விடலாம் போலிருக்கு.''

''ஒரு பஞ்சுப் பொதியை அப்பா வாயில் திணித்துவிட்டு என்னமா சிரிக்கச் சிரிக்கப் பேசிக் கொண்டு இருந்தார் தெரியுமா, மைதிலி?''

''என்னடா சொன்னார், சேகர்?''

''டாக்டர் சொன்னார், 'சார் நீங்க பல்லைப் பிடுங்கும்போது துளிக்கூட முகத்தைச்சுளிக்கவில்லை. அசைக்கவில்லை. என்னுடைய பிரதம கொறடா உங்களை ஒண்ணும் செய்ய முடியவில்லை. உங்க முகமும், பாவமும் டி.வி.க்குனே அமைந்தாப் போல இருக்கு.''

குட்டிச் சிரிப்புடன் சின்னக்குடி இடைமறித்துத் தொடர்கிறார்: ''என்ன இருந்தாலும் வயசுக்கு மதிப்புதான். அதான் இந்த டாக்டர் கிட்டே போனேன். இவ்வளவு வயசானாலும் டாக்டருக்கு எல்லாப் பல்லும் பளிச்சுன்னு இருக்கு.''

''வயசானவரா? என்னப்பா சொல்றேள். டாக்டர் ரகுராமன் வயசானவர் இல்லையே.''

''அவன் கிட்டே போகவில்லை நான். சின்னப் பயல்கள். எசகு பிசகாச் செய்வார்கள். மூஞ்சி வீங்கிவிட்டால் டி.வி.யில் எப்படித் தலையைக் காட்டுவது. பயங்கர க்ளோஸ்-அப் வேறு காட்டுவார்கள். பார்க்கும் குழந்தைகள் அலற மாட்டார்களா?''

''அப்போ, நீங்க போன டாக்டர் பேர் என்னப்பா?'' கவலையுடன் கேட்டாள்.

''திருவல்லிக்கேணியில் இருக்கார். கடைசியில் பார்த்தால் நமக்குத் தூரத்து உறவு. பீஸ் வாங்க மாட்டேன்னு சொல்லிவிட்டார். உன் ஜாதகம்தான் வாங்கிண்டார், அவர் பிள்ளைக்காக.''

''ஜாதகமா? அந்த டாக்டர் பேர் என்ன?''

சின்னக்குடி ஒரு பேரைச் சொல்கிறார். கேட்டவுடன் மைதிலிக்குத் திடீரென்று 'காண்டாக்ட் மைக்' வைத்த வீணையில் கன வேகமாக யாரோ கல்யாண வசந்தத்தை வாசிப்பது போலிருந்தது.

''அவர் பிள்ளையும் பல் டாக்டராம். பேர் ரகுராமனாம்.''

சட்டென்று கல்யாண வசந்தத்தை விட்டுத் தானி, பேஹாக், காபி, பேகட, ஹுசேனி என்று ராகமாலிகைச் சுற்றுலா செய்கிறது வீணை ஒலி.

''அப்பாவை விட்டே ரகு காரியத்தைச் சாதித்து விட்டாரே?'' மைதிலி முணுமுணுக்கிறாள். ''பல்லாதவர்.... சீச்சீ.. பொல்லாதவர்!''

ராகமாலிகைச் சுற்றுலாவைச் சம்பிரதாயமாக மத்யமாவதியில் முடித்துக்கொள்கிறது வீணை ஒலி!

# ராகம் ஓர் இடம்

**காட்சி—1**

[காலை வேளை. சிவகுமார் சுவாரஸ்யமாக நாற்காலியில் சாய்ந்து கொண்டு துப்பறியும் நவீனமொன்றிலே ஆழ்ந்திருக்கிறான். அடுத்த போர்ஷனிலிருந்து 'மாரு பல்க' என்று கணீரென்ற குரலில் பாட்டுக் கேட்கிறது.]

சிவகுமார் (எரிச்சலுடன்): அப்பா! அப்பா!

அப்பா: (என்னவோ ஏதோவென்று பதற்றப்பட்டு): என்னடா, என்ன?

சிவ: இது என்ன ஓயாத ரோதனை? இவர்களைக் காலி பண்ணணுமென்று அம்மாவிடம் சொல்லலையா?

அப்பா: சொன்னேன். ஐயோ பாவம், ரொம்ப வருஷமாக இருக்கிறார்கள். இருந்து விட்டுப் போகட்டுமே என்கிறாள்.

சிவ: அம்மாவுக்கு வர வர—

அம்மா (வந்துகொண்டே): மூளை மழுங்கிப் போயிடுத்து என்கிறாயாக்கும்? (புன்னகையுடன்) இருக்கலாம். உன்னைப் பெத்திருக்கிறேனே. ஒரு நாள் கிழமையானால் கணீரென்று அந்தப் பெண் வத்சலா பாடறதைக் கேட்க எவ்வளவு சந்தோஷமாக இருக்கு தெரியுமோ?

சிவ: பெரிய சந்தோஷத்தைக் கண்டுவிட்டே போ! பூனை பிறாண்டற மாதிரி என்ன பாட்டு!

[சற்று ஓய்ந்தது போல் இருக்கிறது. திடீரென்று மறுபடியும் உரக்க ஒலிக்கிறது. 'யாரோ இவர் யாரோ')

சிவ; சேச்சே சரியான நியூசன்ஸ்.

அம்மா; ஏதோ கண்டபடி டான்ஸ், பாப் மியூஸிக் என்று கூத்தடிக்காமல் இப்படி இருக்கிறதே என்று சந்தோஷப்படு (திரும்பி) உங்களுக்குத் தெரியுமோ? லலிதா மாமி பெசண்ட் நகர்லே வாடகைக்கு விட்டிருந்தாளே அந்த வீட்டிலே ஒருத்தன் இல்லாத கலாட்டாவெல்லாம் பண்ணி,...

சிவ (குறுக்கிட்டு): நீ ஒருத்தி அம்மா, ஏதோ கேட்டால் ஏதோ சொல்லி...

(மெல்லிய சப்தம் கேட்கிறது. வாசலில் டக் டக்கென்று கதவு தட்டப்படும் ஓசை கதவைத் திறக்கிறாள் அம்மா. வத்சலா.)

வத்சலா: மாமி ஒரு சின்ன ரிக்வெஸ்ட். (தயங்குகிறாள்).

அம்மா: உள்ளே வந்து உட்கார்ந்துதான் சொல்லேன்.

வத்: இன்றைக்கு டி.வி.யிலே பாலமுரளி கிருஷ்ணா கச்சேரி இருக்கு. வந்து கேட்கலாமோ?

அம்மா: அடடா, இப்பத்தான் ஞாபகம் வரது. ஏண்டா சிவு, டி.வி.யை ரிப்பேர் பண்ணக் கொடுத்தியே வந்துவிட்டதோ?

சிவ (முணு முணுத்தபடி) சத்தியமா இன்று வராது.

அம்மா: என்னடா, உரக்கச் சொல்லேன்!

சிவ (சலிப்படைந்து): எக்கச்சக்கமா மிஸ்டேக் இருக்கு அம்மா. ஒரு வாரத்துக்கு மேல் ஆகும்.

அம்மா: ஏண்டா வழக்கமா கொடுக்கிறராம் டி.வி. கிளினிக்கிலேதானே கொடுத்திருக்கு? கேட்டால் வேறே டி. வி. தருவான்! (வத்சலாவிடம் திரும்பி) கவலைப் படாதே. கச்சேரி கேட்க வரலாம்!

சிவ (வத்சலா அகன்றதும்): நீ எதையாவது சொல்லிவிடு. இப்போ அவள் கச்சேரி கேட்காவிட்டால் என்ன குடி முழுகிப் போய்விடும்?

அம்மா: பாவண்டா அந்த வத்சலா. தாயில்லாப் பொண்ணு. வரன் எதுவும் சரியா அமையலை. ஏதோ சங்கீதத்திலே திருப்தி அடைகிறாள். அவளைப் பார்த்தா ஏதோ ஒரு ராகமே அமைதியா வடிவெடுத்து வந்தது மாதிரி....



சிவ: ஹோல்டான்! நீ வர வர டி.வி., டிராமா நிறையப் பார்க்கிறேபோலிருக்கு! வசனம் பேசறியே!

அம்மா: எப்படியோ இன்னிக்கு டிவிக்கு வரவழைச்சுடு!

[பக்கத்துக் குடித்தனத்திலிருந்து வத்சலா சுலோகம் பாடுவது கேட்கிறது. அப்புறம் முடிந்து விடுகிறது.]

சிவ (கிண்டலாக): இத்துடன் இன்றைய காலை ஒலிபரப்பு முடிவடைந்தது. மாலை ஐந்தரை மணிக்கு மீண்டும் ஆரம்ப மாகும்! மிஸ் வத்சலா....

## காட்சி—2

[சிவகுமார் வெளியே போய்விட்டு வருகிறான். வீடு பூட்டியிருக்கிறது. லேசாகத் தூறிக்கொண்டிருக்கும் மழை பலக்கிறது.]

வத்சலா: இங்கே வாருங்களேன்! உட்காருங்கள்.

சிவ: ஏதாவது சொல்லிவிட்டுப் போனார்களா மா?

வத்: பக்கத்திலே அலமேலு மாமி வீட்டுக்குப் போய்விட்டு வரேன்னு சொன்னார்கள். ஒருவேளை நீங்கள் சீக்கிரம் வருவீர்கள் என்று எதிர்பார்க்கலை போலிருக்கு.

சிவ (எரிச்சலுடன், மகா கோபத்துடன் உட்காருகிறான். மனத்துள் அப்பாவையும் அம்மாவையும் திட்டித் தீர்க்கிறான்.)

வத் (புன்னகையுடன்): உங்களுக்கு ஒன்றும் டிஸ்ட்ரபன்ஸ் இல்லையே?

சிவ (திகைத்து): எது?

வத்: நான் பாடப் போகிறேன். இன்று வெள்ளிக் கிழமை!

சிவ: ஓ நோ! (வெளியே அவன் பார்வை செல்கிறது. மழை கொட்டு கொட்டென்று கொட்டிக் கொண்டிருக்கிறது.)

வத் (சிரித்துவிட்டு) வேறு வழியே இல்லை. பிடிக்காத சினிமா மாதிரி! (ஸ்வாமியை நமஸ்கரித்துவிட்டு 'தேவி நீயே துணை' என்று பாடுகிறாள். தொடர்ந்து 'அகிலாண்டேசுவரி' என்ற கீர்த்தனை.)

சிவ (நெளிகிறான்; திரும்புகிறான். கவனத்தை வேறு ஒன்றில் திருப்ப முயற்சி செய்கிறான்) (உதட்டோடு) சனியன் பிடிச்ச அம்மா சாவியைக் கொடுத்துவிட்டுப் போயிருக்கக் கூடாதோ?

(திடீரென்று வத்சலா வேறு பாட்டுப் பாடுகிறாள். சிவகுமாரின் கவனம் திரும்புகிறது. அட... இது ஏதோ தெரிந்த பாட்டு போலிருக்கிறதே!

சிவ (மெதுவாக): இது என்ன ராகம்?

வத்: ராகமாலிகை பாடினேன். அபிராமி அந்தாதி. இந்த ராகம் அடாணா!

சிவ: ஏதோ சினிமா பாட்டுக்கூட இதே ராகத்தில்...

வத்: இருக்கும். இந்த மாதிரி ராகங்களெல்லாம் சினிமாவிலே ரொம்ப எடுக்கும். (வாசற்புறம் சிவகுமாரின் பெற்றோர்கள் வருவது தெரிகிறது.)

வாங்கோ! சீக்கிரம் கதவைத் திறங்கோ. உங்க பிள்ளை முள் மேலே உட்கார்ந்திருப்பது மாதிரி!

அம்மா (நிதானமாக) ஏண்டா சிவு, ரொம்ப நாழிகை காத்துக் கொண்டிருந்தாயோ அலமேலு வீட்டுக்குப் போனபோது...

சிவ (கடுகடுப்புடன்): முதலிலே போய்க் கதவைத் திற அம்மா.

வத்: மழை கொட்டியதோ இவர் இங்கே உட்கார்ந்திருந்தாரோ! என் பாட்டைக் கேட்பது தவிர வேறே வழியே இல்லை!

அம்மா: நல்லதுதானே? பாடப் பாட ராகம். கேட்கக் கேட்க ரசனை! (சொல்லிக் கொண்டே போகிறாள்.)

சிவ (சின்னக் குழந்தை போல): நீ என்னம்மா சாவி தராமலே போய்விட்டே, எனக்கு ரொம்ப தர்ம சங்கடமாப் போய் விட்டது. வத்சலா பாட்டுக்கு என்னென்னவோ பாடுகிறாள். ஒரு எழவும் தெரியவில்லை எனக்கு. ஹிந்தி சினிமாவிலே கூட்டத்தோடு சிரிக்கிற மாதிரி—

அம்மா: இப்போ என்ன ஆயிடுத்து? அப்படியாவது நல்ல ரசனை வரட்டுமே!

[சிவகுமார் ரேடியோவைத் திருப்புகிறான். பற்பல வாத்தியங்களின் கலவைகளினூடே கீச்சுக் குரல் ஒலிக்கிறது. அதையும் மீறி வத்சலா சற்று முன் பாடியது தன் மனத்துள் ஒலிப்பது கேட்டு, அவனுக்கே ஆச்சரியமா யிருக்கிறது.]

## காட்சி 3

[ஒரு ஞாயிற்றுக் கிழமை; சிவகுமார் தீவிரமாய்ச் செய்தித் தாளில் ஈடுபட்டுக் கொண்டிருக்கிறான்.]

அப்பா: என்னடா நியூஸ் முக்கியமா?

சிவ: டி. வி. ப்ரோகிராம்லே என்னிக்குக் கச்சேரி என்று பார்க்கிறேன்!



''பாகவதர் ஏன் ஹெல்மெட் போட்டுக் கிண்டிருக்கார், அதிசயமாக!''

''கடம் வாசிக்கிறவர் ரஜினியோட ரசிகராம். ரஜினி ஸ்டைல்லே ஏழெட்டு தடவை கடத்தைத் தூக்கிப் போட்டுப் பிடிக்கிறாராம், அதுக்கும் பயந்து தான்!''

—ஜி. நடராஜன்

அப்பா: பேஷ். பலே. உனக்கும் இன்ட்ரஸ்ட் வந்து விட்டதா?

சிவ: சேச்சே! அன்று பார்த்து வீட்டிலே தங்கக் கூடாது. எந்தக் கச்சேரியானாலும் வத்சலா சம்பிரமமாக வந்து உட்கார்ந்து விடுகிறாள். நமக்குத்தான் எப்படி ரசிக்கணும், எப்போ தலையை ஆட்டணும்னு எதுவுமே தெரியவில்லையே!

அப்பா (சிரித்து): இது எப்படி இருக்கிறதென்றால் கொசுவுக்குப் பயந்து (திடீரென்று ஞாபகம் வந்தவராக) இன்னும் கொஞ்ச நாள்தானே?

சிவ (திகைத்து): அப்புறம்?



பாகவதர்: ஹாலிலே நூறு பேருதான் இருப்பாங்க. ஆனா ஒவ்வொரு கீர்த்தனை முடிஞ்சதும் ஆயிரம் பேர் கை தட்டுற அளவு ஆரவாரம் கேட்குதே!

சபாகாரியதரிசி: உங்களை உற்சாகப் படுத்த நேற்றைய கச்சேரியின் கை தட்டலை டேப் பண்ணி இப்ப இடையிடையே ஒலி பரப்பறோம்!

கே. ஆர். எம்.

அப்பா: அது தெரியாதா? கல்கத்தாவிலிருந்துபெண் பார்த்துவிட்டுப் போனார்களாமே? அநேகமாக அது முடிந்துவிடுமென்று அவள் அப்பா சொன்னார்.

அம்மா: ஏதோ நல்லபடியா முடிஞ்சா தேவலே. வத்சலா பாவம் இத்தனை நாள் உருக்கமா அகிலாண்டேசுவரியை வேண்டிக்கொண்டதற்குப் பலன் இருக்கும். (சிவகுமார் ஒரு விநாடி பிரமித்துப் போய் நிற்கிறான். மனத்துக்குள் ஒரு சூன்யம் நிலவுவதை அவனாலேயே தவிர்க்க இயலவில்லை.)

அப்பா: உனக்கு இனிமேல் பெரிய 'ரிலீப்' தான். பூனை பிறாண்டற சங்கீதம் கேட்க வேண்டாம்!

[''சார், சார்!'' என்ற குரல். கதவைத் திறந்து பார்த்தால் — வத்சலாவின் தகப்பனார்.]

வ. அப்பா (முகமெல்லாம் மலர): கொஞ்ச முன்னாலேதான் தந்தி வந்தது. தையிலேயே முகூர்த்தம் வைத்துக் கொள்ளலாமென்று.

அப்பா: ரொம்ப சந்தோஷம். பிள்ளைக்கு என்ன வேலே?

வ. அப்பா: சொந்த பிஸினஸ்.

அப்பா: அதனாலென்ன? எதிலும் அதிர்ஷ்டம் இருந்தால் முன்னுக்கு வரலாம். பாவம் வத்சலாவும்தான் தினமும் பாடி வேண்டிக் கொண்டதற்குப் பலன் கிடைச்சுடுத்து.

வ. அப்பா: அதுதான் குறை!

சிவ (குரல் மாற): என்ன?

வ.அ.: பிள்ளைக்கு அதிலே டேஸ்ட் கிடையாது. அதனாலென்ன நாம் தினமும் பாட்டுக் கச்சேரியா பண்ணப் போகிறோமென்று சொல்லி அவளைத் தேற்றினேன்.

அப்பா: நன்றாய்ச் சொன்னீர்கள். எல்லாமே ஒரு ஸ்டேஜ் வரைதானே?

வ. அப்பா (சிறிது தயங்கி): கல்யாணத்துக்கு முந்தின நாள்... ஏன் இரண்டு நாளுக்கும் மேலே உங்கள் இடம் தேவைப்படும்... கொஞ்சம் உதவி...

அப்பா: அதற்கென்ன, ஜமாய்ச்சுடலாம்.

[சிவகுமார் அசையாது நிற்கிறான். பக்கத்து போர்ஷனிலிருந்து வத்சலா பாடுவது கேட்கிறது. 'யாரென்று ராகவனை எண்ணினீர்' - குரலில் தொனித்த குழைவு சிவகுமாரை என்னவோ செய்கிறது.]

## காட்சி 4

[வெறிச்சோடி இருக்கிறது அடுத்த போர்ஷன். வத்சலா திருமணமாகிக் குடித்தனம் போய்விட்டிருக்கிறாள்.]

அம்மா: வெள்ளிக் கிழமை. பொழுது விடிஞ்ச உடனேயே வத்சலா ஞாபகம்தான் வந்தது. கணீரென்று சுலோகம்பாடுவாளே.

அப்பா: நல்ல பெண். நேற்றுக்கூட டி.வி. யிலே இசை நாடகம் பார்த்தபோது அவளை நினைத்துக் கொண்டேன்.

சிவ: நன்றாக இருந்தது இல்லே?

அப்பா: அட, உனக்குக்கூட டேஸ்ட் வந்து விட்டதா?

அம்மா: ம்... இப்போ கல்கத்தாவிலே என்னமாய் இருக்காளோ! எப்படியும் பாடாம அவளாலே இருக்க முடியாது. பாடறபோதெல்லாம் நம்மை நினைத்துக் கொள்வாள்.

அப்பா: அட, அந்தக் கூத்து தெரியாதா உனக்கு?

அம்மா: என்னது!

[சிவகுமார் திரும்புகிறான் திடுக்கிட்டுப் போய்]

அப்பா: அவள் அப்பா போய்க் கொஞ்ச நாள் கல்கத்தாவிலே இருந்துவிட்டு வந்தாரே? கதை கதையாய்ச் சொன்னார். வத்சலாவுக்கு வாய்ச்ச கணவன் சரியானமுரடனாம்! 24 மணி நேரமும் பிஸினஸ் பிஸினஸ் தானாம்! கொஞ்ச நாழி தம்புராவை வைச்சு சுருதி சேர்த்தாலே எரிஞ்சு விழுறானாம். அப்பா சொல்லிச் சொல்லி வருத்தப்பட்டார். 'நீதான் அட்ஜஸ்ட் பண்ணிக்கொண்டு போகணும்'னு சொல்லி விட்டு வந்தாராம்!

அம்மா: அட பாவமே அப்படியா சமாசாரம். வத்சலாவுக்குக் கஷ்டம்தான். ஒரு கச்சேரி விட மாட்டாள் டி.வி.லே.

அப்பா: எல்லாம் ப்ராப்தம்.

அம்மா: சரி, அவள் கிடக்கட்டும். நம்ம சிவகுமார் கல்யாணம் என்ன ஆச்சு?

அப்பா: பார்த்துக் கொண்டுதான் இருக்கிறேன். அவனுக்கு எந்த மாதிரி பெண் பிடிக்குமோ? 'ஆப் ஜெய்ஸா கோயீ மேரே' என்று மாடர்னப் பாடற பெண்தான் வேணும்னு பிடிவாதம் பிடிச்சால்! (சிரிக்கிறார்.)



அருள் வாக்கு

## மோக்ஷத்துக்கு வழிகாட்டி

நல்ல சங்கீதம் — அதுவும் குறிப்பாக நம்முடைய சங்கீதத்துக்கேஉடுத்த வீணேயோடு கானம்— என்ருல் அது ஈசுவரனின் பாதத்துக்குக் கொண்டு சேர்ப்பதாகவே இருக்கும். நம் பூர்விகர்கள்இசையை ஈசுவரனின் சரணங்களிலேயே சமர்ப்பணம் பண்ணிஞர்கள். அந்த இசை அவர்களேயும் அதைக் கேட்கிறவர்களேயும் சேர்த்து, ஈசுவர சரணுரவிந்தங்களில் லயிக்கச் செய்தது. தர்ம சாஸ்திரம் தந்த மகரிஷி யாக்ஞவல்கியரும் ''சுஸ்வரமாக வீணேயை மீட்டிக் கொண்டு சுருதி சுத்தத்தோடு லயம் தவருமல்நாதோபாஸனே செய்துவிட்டால் போதும் — தியானம் வேண்டாம்; யோகம் வேண்டாம்; தபஸ் வேண்டாம்; பூஜை வேண்டாம்; கஷ்டமான சாதனேகளே வேண்டாம் — இதுவே மோக்ஷத்துக்கு வழி காட்டிவிடும்'' என்கிருர்.

வீணு வாதன தத்வக்ஞ: ச்ருதி ஜாதி விசாரத:
தாள க்ஞச்ச அப்ரயத்னேன மோக்ஷ மார்க்கம் ஸகச்சதி||

இதிலே இன்னெரு விசேஷம்: சங்கீத வித்வான் மட்டுமல்லாமல் அவன் கானம் செய்வதை வெறுமனே கேட்டுக் கொண்டிருக்கிற அத்தனே பேருக்கும் அவன் ஒருத்தன் செய்கிற சாதனேயின் பூரண பலனை நிறைந்த திவ்விய சுகம் கிட்டிவிடுகிறது.

-ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள்

சிவ: நோ. நோ. நீங்கள் தப்பா அபிப்பிராயம் வைத்துக் கொண்டிருக்கிறீர்கள். [அவன் மனம் வத்சலாவையே நினேக்கிறது. பூப்போன்ற அவன் மென்மையான மனம் தாம்பத்ய வாழ்வில் நொறுங்கிப் போவது போன்ற கற்பனே எழுகிறது.]

### காட்சி 5

[வீடு ஒரு புதுக் களேயுடன் பொலிகிறது. சிவகுமார் ஒரு கிருஹஸ்தன். பொறுப்புள்ள கணவன்.]

சிவ (வீட்டுக்கு வரும்போதே): சரன்...சரன்! [பூஜையறையில் பாடிக் கொண்டிருக்கும் சரளா எழுந்து சென்று கணவனே வரவேற்கிருள்.

சிவ: என்ன சரன்?

சரளா: ஒன்றுமில்லே. நீங்கள் சரன் சரன் என்று கூப்பிடும்போது சன் சன் என்று கூப்பிடுவது போல் இருக்கிறது.

சிவ: சன் சன் என்று எரிந்து விழுவது போல் இல்லேயே! (உன்னே கவனித்து) அட, பாதி பூஜையிலே எழுந்து வந்துவிட்டாயா? முடியேன்.

சரளா: கொஞ்ச நேரமாகும்.

சிவ: அட பரவாயில்லே!

[சரளா திரும்பவும் விட்ட இடத்தில் சுலோகத்தைத் தொடர்கிருள். சிவகுமார் உன்னிப்பாக மெய்மறந்து கேட்டுக்கொண்டிருக்கிருன். முடித்துவிட்டு வருகிருள், சரளா.)

அட, இவ்வளவு நன்ருகப் பாடத் தெரியுமா உனக்கு!

சர: உங்களுக்கு இவ்வளவு நல்ல ரசனே இருக்கே! அதுவே சந்தோஷமா இருக்கு!

சிவ: நடுவிலே ஒரு ராகம் பாடினுயே ஆனந்த பைரவிதானே?

சர (குதூகலித்து): இத்தனே ஞானம் இருக்கிறதே உங்களுக்கு!

சிவ காரணம் யார் தெரியுமோ?

சர: சொல்லுங்கள்.

சிவ: பக்கத்துப் போர்ஷனில் குடியிருந்த வத்சலா தான். (சரளாவின் முகம் மாறுதல் அடைகிறது.) நோ! நீ தப்பா புரிஞ்சுக்காதே. அவள் நாள் தவருது பாடுவாள். 'என்ன இது சரியான 'போர்' என்று நினேப்பேன். டி.வி.லே எந்த மட்டமான கச்சேரி என்ருலும் கேட்க வந்துவிடுவாள். எனக்கு எரிச்சலாயிருக்கும். ஆனுல் அந்த எரிச்சல், வெறுப்பு எல்லாவற்றையும் மீறி, என்னேயும் அறியாமல் ஒரு ரசனே உருவாகியிருக்கு. அதை இப்போதுதான் நான் அனுபவத்திலே உணர்கிறேன். அவளுக்கு நான் தாங்க்ஸ் சொல்லணும்!

சர: நானும்தான். இந்த மாதிரி ரசனே உள்ள கணவர் வாய்க்க அவள் காரணமாயிருந்தாளே! அவள் இப்போ எங்கே இருக்கிருள்?

சிவ: கல்யாணமாகிக் கல்கத்தாவில் இருக்கிருள்....ம் பாவம்!

சர: ஏன், என்ன? (திடீரென ஞாபகம் வந்தவளாக) காப்பி கூடத் தராமல் என்னவோ பேசிக் கொண்டிருக்கிறேனே! (விரைந்து அடுக்களேக்குச் செல்கிருள்.)

அப்பா (கிண்டலாக): நான் கவனித்துக் கொண்டுதான் இருக்கிறேன். வத்சலா குரல் காதில் விழுந்தால் கூட எரிச்சல் படுவே! இப்போ சரளா பாடினுல் தேவ கானமா யிருக்கு!

சிவ (உணர்ச்சியுடன்): இல்லேப்பா, இல்லே! வத்சலா பாடுவதைக் கேட்பதற்காகவே கல்கத்தா போகணும் போல இருக்கு!

அப்பா: அவள் இனிமே பாடுவதாவது! முழுக்க முழுக்க பிசினஸ்காரனின் பெண்டாட்டியாக ஆகிவிட்டாள்.

சிவ: த்சு... பாவம்!

சர: இந்தாருங்கோ காப்பி.

சிவ: உம்... கொடு (யந்திரம் போல் காப்பியை வாங்கி அருந்துகிருன். அவன் மனத்துள் ஒரு காட்சி தெரிகிறது. வத்சலா பாடத் துவங்கும்போதே ''போதும் நிறுத்து பாட்டை!'' என்று அவள் கணவன் கர்ஜிப்பது போல். அவள் கண்களில் நீர் பனிக்கிறது.)

# வாழ்க்கை வசதிப் பொருட்களை வாங்கமுடியுமா உங்களால்?

உங்கள் குடும்பத்தை எண்ணிப் பார்க்கிறீர்கள் எப்போதும். வாழ்க்கை ஓட்டத்தை எளிதாக்கி வசதியாக நடத்திச் செல்ல சில பொருட்களை வாங்க விரும்புகிறீர்கள். அது டி.வி. யாகவோ ஸ்டீரியோ ஸிஸ்டமாகவோ இருக்கலாம். ரெஃப்ரிஜிரேட்டர் அல்லது பேக் ஓவனாகவும் இருக்கலாம். மிக்ஸர் அல்லது தையல் மிஷினாகவும் இருக்கலாம். உங்களிடம் பணம் இல்லை என்றால் இவைபோன்ற பல பொருட்களை வாங்கமுடியாது. பணம். அதைப்பெறுவதற்குத்தான் நீங்கள் திட்டமிடவேண்டும்.

எந்த முறையில் நீங்கள் பணத்தைப் பெறப் போகிறீர்கள் என்பதை முதலில் முடிவு செய்து கொள்ளுங்கள். அதற்கு நிச்சயமான நல்ல சாதனம் பாங்க் உங்கள் தேவைகளுக்கேற்ற திட்டம் ஒன்றைத் தேர்ந்தெடுங்கள் அதில். உங்கள் பணம் எப்படி பத்திரமாக, பாதுகாப்பாக, விரைவாக வளருகிறது, நீங்கள் வாழ்க்கை வசதிப் பொருட்களை வாங்குவதற்கு உதவியாக. எனவே, இப்போதே சேமிக்கத் தொடங்குவீர் பப்ளிக் செக்டர் பாங்கில்— இந்தியாவில் உள்ள 30,000-த்திற்கும் மேற்பட்ட கிளைகள் ஏதாவதொன்றில்— உங்களுக்காகவும் உங்கள் குடும்பத்திற்காகவும்.

ஜாயின்ட்
பப்ளிசிட்டி
கமிட்டி
பப்ளிக் செக்டர்
பாங்குகள்

உறுப்பினர் பாங்குகள்

அலகாபாத் பாங்க் • ஆந்திரா பாங்க் • பாங்க் ஆப் பரோடா • பாங்க் ஆப் இந்தியா • பாங்க் ஆப் மகாராஷ்டிரா • கனரா பாங்க் • சென்ட்ரல் பாங்க் ஆப் இந்தியா • கார்ப்பரேஷன் பாங்க் • தேனா பாங்க் • இந்தியன் பாங்க் • இந்தியன் ஓவர்சீஸ் பாங்க் • நியூ பாங்க் ஆப் இந்தியா • ஓரியண்டல் பாங்க் ஆப் காமர்ஸ் • பஞ்சாப் நேஷனல் பாங்க் • பஞ்சாப் & சிந்து பாங்க் • ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா • ஸ்டேட் பாங்க் ஆப் பிகானேர் & ஜெய்ப்பூர் • ஸ்டேட் பாங்க் ஆப் ஹைதராபாத் • ஸ்டேட் பாங்க் ஆப் இந்தோர் • ஸ்டேட் பாங்க் ஆப் மைசூர் • ஸ்டேட் பாங்க் ஆப் பட்டியாலா • ஸ்டேட் பாங்க் ஆப் சௌராஷ்டிரா • ஸ்டேட் பாங்க் ஆப் திருவாங்கூர் • சிண்டிகேட் பாங்க் • யூனியன் பாங்க் ஆப் இந்தியா • யுனைடெட் பாங்க் ஆப் இந்தியா • யுனைடெட் கமர்ஷியல் பாங்க் • விஜயா பாங்க்.

## பப்ளிக் செக்டர் பாங்குகள்—
## எங்கிருந்தாலும் என்றும் உங்கள் வாழ்வோடு இணைந்தவை.

# இமையில் அணைத்து உறங்கு

## 7

கழுத்தைச் சுற்றியிருந்த பிடியை விடுவித்துக்கொள்ள அவளிடமிருந்து வெகுவாகப் பிரயத்தனப்பட்டாள், பார்வதம். பலம் கொண்ட மட்டும் விரல்களைப் பிரித்து ஒரே தள்ளாகத் தள்ளியபோது அறையின் மூலையில் போய் அலங்கோலமாக விழுந்தாள் சுமங்களா.

''அநாதையாய்ப் போய்விட்ட உன்னை எடுத்துக் கொண்டு வந்துஏன் வளர்த்தேன்னு நினைக்கிறே! கண்ணுங் கருத்துமாப் பாதுகாத்துக் காலேஜ்வரை படிக்க வெச்சு, ஒரு குறிப்பிட்ட வயசுவரை ஒரு பய உன் மேல கை வைக்காம எதுக்குடி பார்த்துக்கிட்டேன்னு நினைக்கிறே?.... எல்லாம் காரணத்தோடதான்.''

''உன்னை நல்லவள் என்று நம்பி மோசம் போயிட்டேன்.''

''நான் என்னடி உனக்கு மோசம் செஞ்சுட்டேன்?''

வார்த்தைக்கு வார்த்தை ஒரு ''டி''யைப் போட்டுப் பேசிய விதம் சுமங்களாவை அவள் எந்த அளவுக்கு மதிக்கிறாள் என்பதைவெளிப்படுத்தியது. அடி மனத்தில் இருக்கிற குரூரம் வெட்ட வெளிச்சமானது.

தரையில் விழுந்து கிடந்தவள் எழுந்து நின்றாள். தலை பின்புறச் சுவரில் மோதியதால் வலி கிளம்பியிருந்தது.

எதிரே நிற்பவள் தன்னை எடுத்து வளர்த்து ஆளாக்கிப் படிக்க வைத்துப் புகலிடம் தந்த பார்வதமாகத் தெரியவில்லை.

செழித்து வளர்ந்து பலன் தரும் நேரத்தில் அதை ஓர் சணக் கிரயத்துக்கு விற்றுவிடக் கையில் கோடரியுடன் நிற்கும் ஒரு சுயநலமி போலத் தோன்றினாள்.

''நீயும் அருணாசலமும் அவருக்கு நிறையப் பணம் கடன் பட்டிருக்கிறீர்களாமே?''

''ஆமாம்.''

''அதுக்குத்தான் என்னை அவரிடம் ரகசியமாக விலை பேசினீயா?''

''ஆமாம். அதுல என்ன தப்பு?''

''அடித் துரோகி!''

பார்வதம் சிரித்தாள்.

''உனக்கு இதுல இஷ்டம் இல்லேன்னு புத்திசாலித்தனமா ஒதுங்கி இருக்கணும்.! அவனோட அழகு, அந்தஸ்து, பணம் எல்லாத்தையும் பார்த்து நீயும் மயங்கிப் போயிட்டே. உன்னோட மனம் பலவீனப்படாம இருந்திருந்தா நீ பேசறதுக்கு யோக்யதை இருக்கும். மனசையும் இன்னும் எல்லாத்தையும் பறிகொடுத்துவிட்டு இப்போ என்னை ஏன் துரோகின்னு திட்டறே?''

''நான் அவரைக் கல்யாணம் செய்துகொண்டே ஆகணும். அது நடக்கலேன்னு நான் சும்மா விட மாட்டேன்.''

''என்ன பண்ணுவே?''

''என்ன வேணா பண்ணுவேன். ஊரைக் கூட்டி உன்னோட இழிவான செய்கையை நாலு பேர் கேட்கிற மாதிரி செய்வேன். சும்மா இப்படியே விட்டுட்டுப் போயிடுவேன்னு மட்டும் நினைக்காதே!''

''உன்னால ஆனதைச் செய். உன்னை எப்படி வழிக்குக் கொண்டு வர்றதுன்னு எங்களுக்குத் தெரியும்.''

''பார்க்கலாம்டி. எனக்குப் பதில் சொல்லாமல் உங்களையும் விட மாட்டேன். உன்னுடைய மிரட்டலே ஒரு சவாலா நான் ஏத்துக்கிறேன். இன்னும் பத்தே நாளில் எனக்கும் அவருக்கும் கல்யாணம் நடந்தே தீரணும். அதை நீயே ஏற்பாடு செய்தாகணும். இல்லே, உன்னையும் அருணாசலத்தையும் அவரையும் சேர்த்துக் கம்பி எண்ணும்படி செய்வேன். நீ வேணா பார்.''

''நான் சேர்த்து வச்சிருந்த பணத்தையெல்லாம் உன் அப்பன் அன்னிக்கு அழிச்சான்; என்னையும் அழிக்கப் பார்த்தான். அவனே அழிஞ்சுபோனான். இப்ப நீ கிளம்பியிருக்கே!''

''நீ உற்சாகம் கொடுத்தே. நான் அவரோட பழக நீ விரும்பினே. அவர் நல்லவருன்னு நீதான் சொன்னே. என்னை விரும்பறார்னு சொன்னே. கல்யாணம் பண்ணிக்க விரும்பறார்னே. அதுக்குப் பிறகு நாங்கள் பழகின விதத்தில் பரஸ்பரம் எல்லை மீறல்கள் நடந்திருக்கலாம். அதை நான் மறுக்கலே. மறைக்கலே. ஆனால், கொடுத்த வாக்குறுதிகள் காப்பாற்றப்பட வேண்டும். உண்டாக்கிவிட்ட நம்பிக்கைகள் மதிக்கப்பட வேண்டும். இப்போ இதுதான் பிரச்னை. நமக்குள் வீண் சச்சரவுகள் வேண்டாம். வீண் மனஸ்தாபங்கள் வேண்டாம். ஆத்திரத்தில் நான் ஏதும் வரம்பு மீறி இருந்தால் மனத்தில் போட்டுக் கொள்ளாதே! என் வாழ்க்கை சிதிலப்படும் அளவுக்குச் செய்து

விடாதே! ஒரு தாயிடம் கெஞ்சுவது போல் கெஞ்சுகிறேன். உன்னைக் கையெடுத்துக் கும்பிடுகிறேன். எனக்கும் அவருக்கும் எப்படியாவது கல்யாணம் செய்து வைத்து விடு. அவர் விரும்புகிறாரோ இல்லையோ ஒரு சமூக அங்கீகாரமான கல்யாணம் அவசியமாக நடந்தே ஆக வேண்டும்.''

பார்வதம் பதில் ஒன்றும் கூறாமல் அப்பால் போய்விட்டாள்.

அவள் எதிர்பார்க்கவேயில்லை, சுமங்களா இப்படிச் சினமுறுவாள் என்று. அவளைப் பொறுத்தவரையில் அவள் சாதுவான பெண் புத்திகூர்மை உள்ளவள், எதற்கும் அடங்கிப் போகிற தன்மை உள்ளவள், என்றும் தனக்கு அடங்கியிருப்பவள் என்றெல்லாம் எண்ணியிருந்தவளுக்கு இப்பொழுது அவள் எரிமலையாக வெளிப்பட்டது அதிர்ச்சியையே தந்தது.

பார்வதம் பொது வாழ்வில் அதிக அடாவடித்தனங்கள் தெரியாதவள். அவளுடைய ஆரம்ப கால வாழ்க்கைக்கும் பிற்பட்ட வாழ்க்கைப் போக்குக்கும் அதிக வித்தியாசங்கள் உண்டு. இயல்பில் சற்று அவநம்பிக்கையுடன் இருப்பவள். ஆரம்பத்தில் சுமங்களாவின் தந்தையுடன் பிற்பட்டு அருணாசலத்திடம் வந்து ஒட்டிக் கொண்டதற்குக் கூட மிகப் பெரிய ஆபாசப் பின்னணி எதுவும் இல்லை. அது ஒரு வகை மன வேகம். அவ்வளவே! தன்னால் ஓர் ஆண் துணையின்றி வாழ முடியாது என்கிற அவநம்பிக்கையினால் உண்டான மன அங்கீகரிப்பு, இரண்டாவதாக அருணாசலத்தை அவள் தேர்ந்தெடுத்துக்கொண்டதற்குக் காரணம்.

இதைத் தவிர அவள் வாழ்வில் தடம் புரண்ட சம்பவங்கள் ஏதும் இல்லை.

பரமேஸ்வரன் தான் கொடுத்த கடனைக் கேட்க வந்தபோதுதான் சுமங்களாவைப் பற்றி அக்கறையுடன் விசாரித்தான். அவள் மேல் ஓர் அன்பும் பரிவும் இருப்பதாக வெளிக் காட்டிக் கொண்டான்.

அது பார்வதத்தின் மனத்தில் புதிய சிந்தனையொன்றைத் தூண்டி விட்டது.

'இவனை வளைத்துப் போட்டுக் கொண்டால் என்ன? பையனும் நன்றாக இருக்கிறான். அதிக சிக்கல் இல்லாத குடும்பம்.

'வருகிற சந்தர்ப்பங்களைப் பயன்படுத்திக் கொண்டால் என்ன?'

சுமங்களாவைப் பற்றி அவன் அதிகம் விசாரிக்கத் தொடங்கியபோது அதையே ஒரு கொடித்தடமாக அமைத்து, ராஜபாட்டைக்கு வழி செய்து கொள்ளத் திட்டமிட்டாள். இது ஒன்றுதான் மனதார அவள் வகுத்த திட்டம். இதை அருணாசலத்திடம் கூறியபோது அவர் இதற்குத் தமது பூரண சம்மதத்தைத் தரவில்லை. அவரைப் பொறுத்தவரை சுமங்களாவிடம் அவருக்கு ஒரு பரிவு உண்டு. அவளை மையப் படுத்திப் பேரப் பொருளாக்க ஒப்பவில்லை.

''அது ஏதும் வித்தியாசமா நெனைச்சுக்கப் போவுது! எப்படியும் நாம பரமேஸ்வரன் கிட்டப் பட்ட கடனைப் பத்தி அது தெரிஞ்சுக்காம இருக்கப் போறதில்லே. தெரிஞ்சுக்கறப்போ மனசு கஷ்டப்படும்'' என்றார்.

''ஒரு அழகான பொருளை வெச்சுக்கிட்டுக் கடனைத் திருப்பித் தர இவ்வளவு சங்கடப் படறியே?'' என்று பரமேஸ்வரன் ஒரு முறை கேட்டபோது பார்வதம் அந்தக் கணத்தில் கூனிக் குறுகித்தான் போனாள். 'இந்த வாலிபன் என்ன இப்படி இவ்வளவு பச்சையாப் பேசுறான்' என்று மனம் நடுங்க அவனையே பார்த்தாள்.

அதுதான் அவள் நடுங்கிய முதல் தார்மீக நடுக்கம்.

அதுதான் அவள் அடைந்த முதல் அதிர்ச்சி;

அதற்குப் பின்,

அந்த நினைவு அவளுக்குச் சகஜமாகி... பின் பழக்கமாகி.... அதன் பின் விளையாட்டாகி....

என்றாலும் அதன் பேரில் இப்படிப்பட்ட விபரீத எண்ணங்களை அவள் வளர்த்துக் கொள்ளவில்லை. எப்படியும் பரமேஸ்வரன் சுமங்களாவை விவாகம்



செய்து கொள்ள வேண்டும் என்றே அவள் தீவிரம் காட்டினுள். அவன் ஆரம்பத்திலிருந்தே தன்னை ஒரு உல்லாசி போலக் காட்டிக் கொண்டானே தவிர, பொறுப்புள்ளவனுகக் காட்டிக்கொண்டதே யில்லை. அவனை எப்படியாவது மாற்றவேண்டும். தன் வழிக்குக் கொண்டு வரவேண்டும். தான் பட்டிருக்கிற கடனிலிருந்து நிரந்தரமாக விடுபட ஒரு மார்க்கத்தைத் தேடிக் கொள்ள வேண்டும்!

இதுதான் பர்வதத்தின் சிந்தனையாக இருந்தது.

ஆனல், பரமேஸ்வரன் அதற்கு இடம் தரவில்லை.

சுமங்களா கண்ணுடி முன் நின்றுகொண்டிருந்தாள். தலையை வாரிப் பின்னிக்கொண்டாள். நெற்றியில் திலகம் மட்டும் இட்டுக் கொண்டாள். அவள் அழுது கொண்டிருந்ததால் கண்களுக்கு மை தீட்டிக் கொள்ள முடியவில்லை. பின்னலைப் பின்புறம் தள்ளிக் கொண்டவள் கட்டிக் கொண்டிருந்த புடவையையே அவிழ்த்துக் கீழ்ப்புறம் மேல் புறமாக மாற்றிச் சுருக்கங்களைச் சரிப்படுத்திக் கொண்டாள்.





வாசற் கதவு காற்றில் மோதிக் கொள்ளும் சப்தம் கேட்டது.

பர்வதம் வெளியே வந்தாள். சுமங்களா வீட்டை விட்டு வெளியே போய்க் கொண்டிருந்தாள்.

அவள் போவதைப் பர்வதம் பார்த்துக் கொண்டே நின்றாள்.

'நாம் அப்படி யெல்லாம் பேசியிருக்கக் கூடாது. அது பயப்படறது நியாயம்தானே? நாம ஆக்கமும் ஊக்கமும் கொடுத்ததால் தானே இப்படி யெல்லாம் நடந்தது. இப்போது அதை நியாயப்படுத்தற மாதிரி பேசினு அதுக்கு ஆத்திரம் வரத்தானே செய்யும்!' என்று மனம் வருத்தப்பட்டுக் கொண்டாள்.

அருணுசலம் வீட்டினுள் நுழைந்தார். தெருவில் கண்ணீர் விட்டுக் கொண்டே போகும் சுமங்களாவைப் பார்த்தபடியே நின்றிருந்த பர்வதத்தைப் பார்த்தார்.

உள்ளே வந்த அவருக்குப் பின்னல் பர்வதம் வந்தாள்.

''அது ஏன் அழுதுக்கிட்டே போகுது?''

''அதுவும் கொஞ்சம் வரம்பு மீறிப் பேசிச்சு... நானும் பேசிட்டேன்.''

''பரமேஸ்வரன் வந்தாரா?''

''இல்லே. விவகாரத்துக்குக் காரணமே அதுதான். நேத்து தீர்மானமாச் சொல்லிட்டுப் போயிட்டாரு. சுமங்களாவை அவர் கல்யாணம் செஞ்சுக்க மாட்டாராம். இவ இன்னும் பத்து நாள்லே அவங்க ரெண்டு பேருக்கும் கல்யாணம் செஞ்சு வைக்க லேன்னு பெரிய தகராறு வரும்ன்னுகத்துது.''

''இவளைப் பண்ணிக்கப் பரமேஸ்வரனுக்கு என்ன தயக்கம்? கசக்குதாமா?''

''நீங்க என்னங்க புரியாமப் பேசறீங்க? இப்ப அதுக்கு நெறையச் செஞ்சு போட்டுக் கல்யாணம் பண்ணி வைக்கத் தயாரா? பணம் வச்சிருக்கீங்களா?''

''பர்வதம்... நான் ஆரம்பத்திலேயே உங்கிட்டே ஜாடையாச் சொன்னேன். அவரு ஒரு மாதிரியான ஆளு. நம்மை நம்பி இருக்கிற பெண்ணைப் பகடைக்காயாக்கி அந்த ராஜாவைப் பிடிக்கிறதுக்குள்ளே காயை வெட்டி வெளியே தள்ளிவிட்டுட்டு அவன் போயிடப் போறான்னு சொன்னேன் இல்லையா?''

''ஆமாம், சொன்னீங்க. வியாபாரத்துக்குப் பணம் வேணும் என்பதையும் நீங்க தானே சொன்னீங்க? நாம பட்ட கடனை அடைக்கணும்னு நீங்கதானே சொன்னீங்க! வெறும் கையிலே எப்படி முழம் போட முடியும்? நாம எதையோ முன்னுலே நிறுத்தி எதையோ பிடிக்கலாம்னு நினைச்சோம். இப்போ... வெட்டற காயும் இல்லே... வெட்டப்பட வேண்டிய ராஜாவும் இல்லாமப் போயிடும் போல இருக்கே...?

''நேத்து அவர் கிட்ட மறுபடியும் கேட்டேன். அவரு சிரிச்சுக்கிட்டே, 'இதை இத்தோட விட்டுட்டுக் கடனை நேர் பண்ணிக்க' கடனை வஜா செய்த மாதிரி நினைச்சுக்கிறேன்' னுட்டுப் போயிட்டார். அதுக்கு மேலே நான் என்ன பேசறது? வியாபாரத்துக்கு உதவறதைப்பத்தி ஒரு கோடி காட்டினுரு. 'அதைப் பத்திப் பிறகு நாம நிறையவே பேசவேண்டி யிருக்கு. சுமங்களா கிட்டே கொஞ்சம் சொல்லி வையுங்க. அது கல்யாணம் அது இதுன்னு பேசுது' அப்படின்னுட்டு எழுந்து போயிட்டாரு. அப்போ அவருக்கு இதுலே இஷ்டம் இல்லேன்னு தானே அர்த்தம்.''

அருணுசலம் நாற்காலியில் மௌனமாக உட்கார்ந்து விட்டார்.

பர்வதம் குழப்பமுடன் உள்ளே போனாள்.

(தொடரும்)




கர்நாடக இசைக் கலைஞர் மகாராஜபுரம் சந்தானம் அவர்களை, அவரது தியாகராயநகர் இல்லத்தில், பிரபல ஹிந்துஸ்தானி பாடகி லக்ஷ்மி சங்கர் சந்தித்து உரையாடுகிறார் :

சந்தானம்: நமஸ்காரம் லக்ஷ்மி சங்கர்! உங்களை இன்று சந்தித்ததில் ரொம்ப சந்தோஷம். இப்படி ஒரு வாய்ப்பை ஏற்படுத்திய 'கல்கி' பத்திரிகையின் வாசகர்களுக்கு இந்தச் சந்திப்பு விருந்தாக அமையுமென்று எண்ணுகிறேன். 'கோபாலா, மேரி கருணாக்யூன்', 'நஹி ஆவே', 'நிசி தினு பர்ஸத் நைநா ஹமாரே' போன்ற பாட்டுக்களை உங்கள் கச்சேரியில் கேட்டு ரசித்திருக்கிறேன். அந்த ஹிந்துஸ்தானி சங்கீதத்தைப் பற்றிச் சில விஷயங்களை அறிந்துகொள்ள ஆசைப்படுகிறேன்.

லக்ஷ்மி (புன்னகையுடன்): ஆகா, கேளுங்களேன்.

சந்தா: கர்நாடக சங்கீதத்துக்கு ரொம்பக் கால பாரம்பரியம் இருக்கிறது. சிலப்பதிகாரத்துக்கு முன்னமேயே அதிக வளர்ச்சி அடைந்திருந்ததாகவும், Pre-christian era வுக்கு முன்பே இசை மிக உயர்ந்த நிலையில் இருந்து வந்ததென்றும் தெரிய வருகிறது. அது மாதிரி ஹிந்துஸ்தானி சங்கீதத்துக்குப் பாரம்பரியம் உண்டா?

லக்ஷ்மி: அவ்வளவு பெரிய ''ஹெரிடேஜ்'' கிடையாது. 13ம் நூற்றாண்டு வரை இந்திய இசை ஒன்றாகத்தான் இருந்து வந்திருக்கிறது. பிறகு பெர்ஷிய அராபிய பாதிப்பு ஏற்பட்டு ஹிந்துஸ்தானி இசை தனியாக வேறுபட்டுப் போயிற்று. இதற்குப் பிறகுதான் ஆலாப், ஜோட் என்று விரிவாயிற்று. இதற்கு முன்னால் த்ருபத் பாணி மட்டுமே இருந்தது. ஜோட் என்பது, இங்கே தானம் பாடுவது மாதிரி. தபேலாவுக்குப் பதில், முன்பு பக்காவஜ் தான் வைத்துக் கொண்டார்கள். 13ம் நூற்றாண்டுக்குப் பிறகுதான் தபேலாவைப் பக்க வாத்தியமாக வைத்துக் கொண்டார்கள்.

சந்தா: எங்கள் சங்கீதத்தில் சரளி—ஜண்டை—அலங்காரங்கள் என்று படிப்படியாகப் பயிலும் முறை இருக்கிறது. உங்கள் முறை எப்படி?

லக்ஷ்மி: அதுபோல சிஸ்டம் இல்லை. அகார சாதகம் பண்ணுவோம். ஒரு குறிப்பிட்ட ராகத்தை எடுத்துக் கொண்டு ஒவ்வொரு ஸ்வரமாக நின்று சாதகம் பண்ணுவோம். ஒரே ராகத்தை ஒரு வருஷம்கூட எடுத்துக் கொண்டு பாடிப் பயிற்சி பண்ணுவோம். சுவாசக் கட்டுப்பாடு ஒரு முக்ய அம்சம். அப்புறம் க்யால். உங்கள் பாட்டிலே க்ருதி மாதிரி. க்யால் என்றால் கற்பனை அல்லது மனோதர்மம் என்று சொல்லலாம். நாலு களைச் சவுக்கம் மாதிரி மெதுவாகப் பாடி, பிறகு க்ளைமாக்ஸில் வேகமாகப் பாடுவோம். இங்கே ஒரு சிறிய விளக்கம். உங்களுக்குப் புரந்தரதாஸரும், சங்கீத மும்மூர்த்திகளும் சேர்ந்து ஒரு வழிமுறையை, ஒரு வடிவத்தை ஏற்படுத்திக் கொடுத்திருக்கிறார்கள். அந்த மாதிரி ஹிந்துஸ்தானி சங்கீதத்தில் எதுவுமில்லை. சுமார் 50 வருஷங்களுக்கு முன்னால் பாத்கண்டே என்ற மராத்தியர், தென்னிந்தியாவுக்கு வந்து, இங்கே கையாளப்படும் முறைகளை எழுதிப் புத்தகமாக வெளியிட்டார். இவை தியரி புத்தகங்கள் என்று கூடச் சொல்லலாம். ஆனால் துவக்கத்தில் தான்சேன், பைஜு—பாவ்ரா, ஸ்வாமி ஹரிதாஸ், அதாரங், சதாரங் ஆகியவர்கள், அவர்கள் முத்திரையோடு நிறைய க்யால் இயற்றித் தந்திருக்கிறார்கள்.

சந்தா: ஹிந்துஸ்தானி சங்கீதத்தில் ஒரு உஸ்தாத் நிலைக்கு வரவேண்டும் என்றால் என்னென்ன முறைகள் எல்லாம் தெரிந்திருக்க வேண்டும்?

லக்ஷ்மி: துருபத், க்யால், தரானா, தும்ரி, டப்பா, தாத்ரா இவற்றை யெல்லாம் முறையாகக் கற்க வேண்டும். பின்னர், கிளாஸிகல் வகையைச் சேர்ந்த துருபத்—க்யால் அல்லது, லைட் கிளாஸிகல் வகையைச் சேர்ந்த தும்ரி, டப்பா, தரானா இவற்றில் ஏதாவது ஒரு துறையில் ஸ்பெஷலைஸ் பண்ணினால் போதும். இசையறிவும், குரலினிமையும் உள்ள எவரும் இதைச் சாதித்து மிகப் பெரிய வித்வானாகிவிடலாம். ஏனென்றால் ஒரு குறிப்பிட்ட format (வடிவமைப்பு) rigidity (கட்டுப்பாடு). அல்லது பத்ததி இதில் நிர்ணயிக்கப்படவில்லை.

சந்தா: கச்சேரிகளில் மெயினாக என்ன ராகம் பாடுகிறீர்கள்?

லக்ஷ்மி: கச்சேரி எந்த நேரத்தில் நிகழுகிறதோ அந்த நேரத்துக்கு ஏற்ற ராகங்களைப் பாடுவது என்பது பரவலாகப் பின்பற்றப்படுகிறது. அதிகாலையில்: லலித், பைராகி; காலையில்: ஆஹிர் பைரவ்; மாலை நாலு மணியில்: பீம்ப்ளாஸ்; ஆறு மணிக்கு மதுவந்தி, யமன் கல்யாண்; இரவு மால்கோஷ் என்று இப்படி.

சந்தா: ஓ, அப்படியா... அங்கேயிருந்து இங்கே பெஹாக், தேஷ், ஜேஜேவந்தி (துவஜாவந்தி) வந்த மாதிரி இங்கேயிருந்து வடக்கே போன ராகங்களைச் சொல்ல முடியுமோ?

லக்ஷ்மி: நிறைய. வாசஸ்பதி, கீர்வாணி, சாருகேசி, நாராயணி, ஆபோகி, சிம்மேந்திர மத்யமம், லதாங்கி எல்லாம் இங்கிருந்து அங்கே போனவைதான். ஆனால் பாடுகிற முறையில் ரொம்ப வித்தியாசம் உண்டு. (சிம்மேந்திர மத்யமம் பாடிக் காண்பிக்கிறார்) சில சமயம் நாங்கள் இவற்றைப் பாடும்போது இது நம்ம ஊர் ராகம்தானா என்று உங்களுக்கே சந்தேகம் வந்துவிடலாம்; ஏனென்றால் பாடுகிற பாணி அப்படி.... (சிரிக்கிறார்கள்).

சந்தா: நீங்கள் பாடுகிறபோது ஒன்று நினைவு வருகிறது. வாய்ஸ் கல்சர் என்பது ஹிந்துஸ்தானி சங்கீதத்தில் ஒரு ஸ்பெஷாலிடி என்கிறார்களே, அதைக் கொஞ்சம் விளக்க முடியுமா?

லக்ஷ்மி: கடுமையான சாதகத்தினால் மட்டுமே இது சாத்தியமாகிறது என்பது என் கருத்து. கர்நாடக இசையில் நிறையக் கீர்த்தனைகளை மனப் பாடம் செய்ய வேண்டும். சில சிரமங்களும் இருக்கின்றன. ஹிந்துஸ்தானி இசையில் அப்படியில்லை. மெலடி — அதாவது சுருதி சுத்தமான இனிமை முக்கியமாகக் கருதப்படுகிறது. ஒரே ராகத்தை வைத்துக் கொண்டு சாதகம் செய்வோம்.

சந்தா: அது கொஞ்சம் 'போர்' அடிக்காதோ?

லக்ஷ்மி: அடிக்காது! க்ளாரிடியும் சுருதி சுத்தமும் வந்தால்தான் மேற்கொண்டு துரித கதிக்குப் போகலாம். இவை கர்நாடக சங்கீதத்தில் இல்லை என்று சொல்ல மாட்டேன். ஆனால் முன்னே குறிப்பிட்டபடி கீர்த்தனைகளே அதிகம் பாடுவதால் கர்நாடக சங்கீத கச்சேரி பாணிக்கு இது ஒத்துவருவதில்லை. காரணம் — கர்நாடக இசையில் ஆரம்பத்திலிருந்து சாதகங்கள் எல்லாம் துரித கதியிலேயே பண்ணுவதனால், சுருதிக்கு அவ்வளவு முக்கியத்துவம் அமைவதில்லை. நாங்கள் செழிப்பான சுருதிக்காக இரண்டு தம்புரா வைத்துக் கொள்கிறோம்.

சந்தா: முன்பு ஒரு முறை சென்னை கிருஷ்ண கான சபாவில் இரண்டு தம்புரா வைத்துக் கொண்டு ஒரு கச்சேரி நடந்தது. நன்றாகத் தான் இருந்தது. ஆனால் இது பழக்கத்தில் இல்லாததால் நடைமுறைக்கு வரவில்லை. (நடுவில் பேட்டியாளர், 'ஒரு சமயம் விமர்சனம் ஒன்றில் இரட்டைத் தம்புரா வைத்துக் கொண்டால், பாடுகிறவருடைய தன்னம்பிக்கைக் குறைவைத்தான் அது காண்பிக்கிறது' என்று வெளியாகியிருந்ததை எடுத்துக் கூறினார்.)

சந்தா: இதை நான் ஒப்புக் கொள்ளவே மாட்டேன். அவர்கள் இரட்டைத் தம்புரா மீட்டி, ஹால் எங்கும் ஒரு ரீங்கார இசையை முதலில் ஏற்படுத்தி, அட்மாஸ்ஃபியரையே மாற்றிவிடுகிறார்கள். பிறகு கச்சேரி தொடங்கியவுடன், சுருதியுடன் அப்படியே ஒன்றிவிடுகிறார்கள்... சரி, ஒரு சிறிய சந்தேகம்: சுத்த மத்யமம், பிரதி மத்யமம் இரண்டும் பக்கத்தில் பக்கத்தில் வருகிறதே உங்கள் ராகங்களில்... அது மட்டுமல்ல, ஒரு ராகம் பாடிக்கொண்டிருக்கும்போது, அந்த ராகத்தில் உள்ள ஸ்வரங்கள்தான் முதலில் கேட்கிறது. திடீரென்று ஒருசில பிரயோகங்கள் வித்தியாசமாகப் படுகிறதே அவை ஸ்பெஷல் பிடிகளா?

லக்ஷ்மி: ஹிந்துஸ்தானி இசையில் கொஞ்சம் சுதந்திரம் அதிகம். ஆனால் நீங்கள் சொன்னது போல் ஒன்றிலிருந்து மற்றொன்றுக்கு மாறுவதை தும்ரி பாடும் பொழுதுதான் செய்வோம். க்யால் பாடும்பொழுது அப்படிச் செய்வதில்லை. பேஸிக்காக ஒரு ராகத்தை எடுத்துக் கொண்டு, பிறகு 2 நிஷாதம், 2 தைவதம் எல்லாம் சேர்த்துப் பாடுவோம்.

சந்தா: எங்கள் சங்கீதத்தில் அரியக்குடி பாணி, மகாராஜபுரம் பாணி, ஜி.என்.பி. பாணி என்கிறது போல் அங்கே ஏதேனும் உண்டா?

லக்ஷ்மி: உண்டே! லயத்துக்கு முக்கியத்துவம் கொடுத்துப் பாடும் ஆக்ரா கரானா. இல்லானாவுக்கு க்வாலியர் கரானா. இனிமைக்கும் சாகித்யத்துக்கும் முக்கியத்துவம் அளிக்கும் பட்டியாலா கரானா. பட்டியாலா கரானாவைச் சேர்ந்தவர்கள் உணர்ச்சி பூர்வமாகப் (Emotional) பாடுவதில் புகழ் பெற்றவர்கள். கிரானா கரானாவில் ஆலாபனைதான் முக்கியம்.

சந்தா: இதில் நீங்கள் எந்த கரானாவைச் சேர்ந்தவர்?

லக்ஷ்மி: நான் பட்டியாலா கரானா. என் குரு பம்பாயைச் சேர்ந்த உஸ்தாத் அப்துல் ரெஹ்மான் கான்.

சந்தா: கர்நாடக இசைக்கு 72 மேள கர்த்தா முறை இருக்கிறது போல, உங்களுக்கு ஏதாவது அடிப்படை இருக்கிறதா?

லக்ஷ்மி: ஹிந்துஸ்தானி இசையில் பத்து தாட் (THAAT.) இருக்கிறது. இவற்றிலிருந்துதான் அத்தனை ராகங்களும் உற்பத்தியாகியிருக்கின்றன.

சந்தா: பக்தி பாவத்தை அடிப்படையாகக் கொண்ட க்ருதிகளைத்தான் நாங்கள் கச்சேரிகளில் பாடுகிறோம். ஹிந்துஸ் தானி இசையில் அப்படி இல்லை போலிருக்கிறதே?

லக்ஷ்மி: ஏன் இல்லாமல்? க்யாலில் பக்தி பாவம் கிடையாதுதான்.. ஆனால் துருபத், தமார், தும்ரி இவற்றில் பக்தி அடிப்படையைக் காணலாம். மேலும் பஜன்கள் பாடுகிறோமே — எல்லாம் மீராபாய், கபீர், சூர்தாஸ் இயற்றிய பக்திப் பாடல்கள் தானே? ஒரு தகவல்விட்டுப் போய்விட்டது. வாய்ஸ் கல்ச்சர் பற்றிக் கேட்டபோதே சொல்லியிருக்க வேண்டும். குரல் இனிமைக்காகவும், சாரீர வளத்துக்காகவும் பாதாம் பருப்பைத் தனியாகவோ அரைத்துப் பாலில் கலந்தோ சாப்பிடுவோம்.

சந்தா: நாங்கள் மிளகும் பாலும் உபயோகிப்பதுண்டு...ஆனால் இப்போது உங்களுக்குக் கொடுக்கப் போவது பாதாம் ஹல்வாதான்! (சிரிக்கிறார்.)

உரையாடல் அமைப்பு: வாதூலன் — சாருகேசி
படங்கள்: சுபா நியூஸ் போட்டோ

---

பழைய பழக்க வழக்கங்களை வெற்றி கொள்ள வேண்டும்; தன்னகத்தே உள்ள தீய எண்ணங்களை அகற்ற வேண்டும்; நற்பழக்கங்களை அவற்றிற்குரிய இடத்தில் மீண்டும் நிலைநிறுத்த வேண்டும்; இவைதான் மனிதனுக்கு விதிக்கப் பட்ட லட்சியமாகும். பிரார்த்தனை ஒன்று தான் இந்த லட்சியம் நிறைவேற உறுதுணையாக இருக்கும். -காந்தி

-பிரியா பாலு

# வாழ்க்கையின் சிறு மகிழ்ச்சிகளுக்காக சேமிப்பது எப்படி?

உங்கள் குழந்தைகளின் முகத்தில் காணும் மகிழ்ச்சி, குடும்பத்தினருடன் உல்லாசப் பிரயாணம்—இவை போன்ற சில மகிழ்ச்சித் துளிகள் வாழ்க்கையின் சிறப்பு அம்சங்களாகும். இன்று சேமிக்கும் வசதியில் உள்ள நீங்கள் கனரா பாங்கில் **நிரந்தரா டெபாசிட்** கணக்கை உடனே தொடங்குங்கள்.

மாதந்தோறும் சேமிக்கும் சிறு தொகையானாலும், ஒரே தவணையில் செலுத்தப்படும் கணிசமான தொகையானாலும் இத் திட்டத்தில் சேமித்த தொகை நிரந்தரமான மாத வருமானத்தைப் பெற வழி செய்கிறது.

உங்கள் பாதுகாப்பான எதிர்காலத்திற்கு உறுதியளிப்பது **நிரந்தரா டெபாசிட்** திட்டம்.

விபரங்களுக்கு அருகில் உள்ள எமது கிளைக்கு விஜயம் செய்யுங்கள். எமது இதர சேமிப்புத் திட்டங்கள்: **காமதேனு, வித்யாநிதி, பாலக்ஷேமா** முதலியன

## நிரந்தரா டெபாசிட்

## கனரா பாங்க்

(தேசியமாக்கப்பட்ட பாங்க்)
நாடெங்கிலும் 1200க்கும்
மேற்பட்ட கிளைகள் உள்ளன.



GH

ம.ஜி.ஆர்

## அத்தியாயம் 21

தன்னுடைய சிரிப்புத்தான் கடைசி சிரிப்பாக இருக்க வேண்டும் என்று திட்டமிட்ட டாக்டர் நல்லசிவம் எஃப். ஆர். ஸி. பி., 'ஐயா'விடம் வந்தான்.

இரண்டு மூன்று நாட்களாக சபாபதி தம்முடைய வளர்ப்புப் பிள்ளையிடம் பேசவில்லை. அவனுடைய முகத்தை ஓரப் பார்வையால் கூடப் பார்க்கவில்லை. அன்றிலிருந்து இன்று வரை அவர் அவன்மீது அன்பைப் பொழிந்திருந்தார். பாசத்தைக் கொட்டியிருந்தார். அவனை டாக்டருக்குப் படிக்க வைத்தவர் அவர். லண்டனுக்கு அனுப்பியவரும் அவரே. வாழ்க்கையில் எந்த அனாதைக்கும் கிடைக்க முடியாத வாய்ப்புகளும் உதவிகளும் நல்லசிவத்துக்குக் கிடைத்திருக்கின்றன. ஆனால் அவன், இவற்றை யெல்லாம் அள்ளிக் கொடுத்த பாசக் கரத்தை. ஒரே வெட்டாக வெட்டுவது போல நடந்து கொண்டுவிட்டான்.

நல்லசிவம் அரேபியா செல்வதை அவர் விரும்பாதது மல்லாமல் வெறுக்கவும் வெறுத்தார். கோட்டை போல அவருடைய வீடு இருக்கிறது. வீட்டில் இருக்கும் பர்மா தேக்கு மரச் சாமான்களை விற்றாலே கிட்டத்தட்ட ஒரு லட்சம் தேறும். அவருடைய கணக்கில் குறைந்தது இரண்டு அல்லது இரண்டரை லட்சமாவது இருக்கும். இந்தச் சொத்தெல்லாம் யாருக்கு? அவருடைய வளர்ப்புப் பிள்ளைக்குத்தானே? இங்கே செய்யும் தொழிலில் கைநிறையப் பணம் வருகிறது. நாளைக்கு அவரை அவருடைய ஆஸ்துமா ஒரேயடியாக இழுத்துக் கொண்டு போன பிறகு சொத்தெல்லாம் நல்லசிவத்தின் காலடியில் விழப்போகிறது. இவற்றையெல்லாம் தூக்கி எறிந்துவிட்டு. அவனுடைய 'ஐயா'வுக்கு ஒரு கை கொள்ளி போட வேண்டும் என்ற எண்ணம் கூட இல்லாமல், நன்றி கெட்டத்தனமாக அவன் மேநாடு செல்லத் தயாராகிறான் என்றால் எப்படி அவனுடன் பேசத் தோன்றும்? அவன் முகத்தைப் பார்க்கத் தோன்றும்?

சபாபதிக்கு அவ்வளவு சீக்கிரம் யார்மீதும் கோபமோ எரிச்சலோ வராது. விபூதி அல்லது குங்குமம் இல்லாத நெற்றிகளைக் கண்டால் ஆத்திரம் வரும். வீதியில் சுவாமி உலா வரும்போது கை கூப்பாவிட்டால் அக்கைகளை வெட்டி எறிய ஆத்திரம் வரும். அவ்வளவுதான்.

ஆனால் இப்போது அவருடைய உள்ளத்தில் கோபம் ஒரு யாகசாலைத் தீயாகக் கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருந்தது.

அவருடைய பேச்சை நல்லசிவம் கேட்கவில்லை.

நல்லசிவம் அவரை மதிக்கவில்லை.

நல்லசிவம் அவரைப் புரிந்து கொள்ளவில்லை; முயலவும் இல்லை.

அவனுக்கு அவர் பெரிதாகப் படவில்லை. அரேபியாதான் பெரிதாகப் பட்டது.

இனிமேல் அவர்எப்படிப் போனால் என்ன என்ற அகம்பாவம் அவனுள் ஏற்பட்டு விட்டது.



அவருக்குக் கொள்ளி போடத்தான் யார் என்று அவன் தன்னையே கேட்டுக் கொள்கிறன். அவனுக்கு அவர் மீது அன்பு இல்லை.

பாசம் இல்லை.

மதிப்பு இல்லை; மரியாதை இல்லை.

அவன் இனிமேல் எங்கே வேண்டுமானாலும் செல்லட்டும். அரேபியா என்ன, அண்டார்ட்டிக் கண்டத்துக்கே செல்லட்டும்.

சபாபதி சாய்வு நாற்காலியில் கண்களை மூடியவராய்ச் சாய்ந்திருந்தார். வறண்டு போன இதயம். ஈரப் பசையற்ற நெஞ்சம். கண்கள் இமைகளுக்குள் வெறும் கூழாங் கற்களாக உறைந்து கிடந்தன.

''ஐயா!''

அவர் கண்களைத் திறக்கவில்லை. 'உம்' கொட்டவில்லை. நல்லசிவம் விடை பெற்றுப் போக வந்து நிற்கிறன்.

அவர் யார்?

அவன் யார்?

அவரிடம் அவன் விடைபெற்றுக் கொள்வானேன்?

''ஐயா!''

''.....''

''ஐயா, ஒரு நல்ல சேதி.''

''....''

''நான் அரேபியா போகவில்லை.''

''உம்.''

''என் எண்ணத்தை மாற்றிக் கொண்டு விட்டேன்.''

''ஏன்?''

''இது என்ன ஐயா கேள்வி?''

''ஏன் மாத்திக்கிட்டே?''

''போக வேண்டாம்னு தோணித்து.''

''அதான் ஏன்னு கேட்கிறேன்.''

''அந்தப் பொண்ணும் போறு... ஆறு என்னுடன் கூடத்தான் போகணும்னு பிடிவாதம் பிடிச்சா....''

''நீங்க ரெண்டு பேரும் இத்தனை நாளா ஒண்ணுப் போனீங்க. ஒண்ணு பாஸ்போர்ட் விசா எல்லாம் வாங்கினீங்க... ஒண்ணுப் போய்த் துணி மணி எல்லாம் எடுத்தீங்க. ....ஆறு இப்பக் கடைசியிலே ஒண்ணுப் போகப் பிடிக்கலேன்னு நீ மட்டும் ஒதுங்கிட்டியா?''

''ஆமாம் ஐயா.. அவள் என்னை ஏமாத்திட்டா....''

''எப்படி?''

''என் கூடப் பழகினவ இன்னொருத்தனைக் கலியாணம் பண்ணிக்கிறதா இருந்தா.''

''எப்ப?''

''ரொம்ப நாள் முன்னுடி. அந்த ஆள் கொஞ்ச நாள் முன்னுலே ஜி. எச்சுக்கு வந்தான். உயிரை விட்டான்.''

''அது சரி, இது உனக்கு எப்படித் தெரிஞ்சுது? யார் சொன்னு?''

''அம்மணிதான்.''

''அவளே சொன்னுளா?''

''ஆமாம்.''

''அதனுலே உன் மனசிலே எரிச்சல் உண்டாச்சு இல்லே?''

''ஆமாம், ஐயா... பழி வாங்கணும்னு ஒரு வேகம். ஒரு வெறி என் மனசிலே பொறந்தது.''

"உனக்கு வெட்கம் இல்லே? நீ மனுஷன் இல்லே?"

"என்ன ஐயா சொல்றீங்க?"

"அந்தப் பொண்ணு உன் மேலே உயிரையே வைச்சிருக்காட்டி, இந்தப் பழைய கதையை அவளாகவே உன்கிட்டே சொல்லுவாளா? ஆனா அவளைச் சொல்லிக் குத்தம் இல்லே! உன் மனசை நானே தப்பாப் புரிஞ்சிட்டிருக்கேனே..."

"என்ன ஐயா சொல்றீங்க?"

"ஒரே ஒரு கேள்வி கேட்கிறேன். பதில் சொல்றியா?"

"கேளுங்க."

"அந்த அம்மணி தன் பழைய கதையைச் சொல்லாமலே இருந்திருந்தா, இன்னிக்கு அவளை ஏமாத்தியிருப்பியா?"

"மாட்டேன். கண்டிப்பா மாட்டேன்."

"அவகூட இப்பப் பிளேன்லே பறந்திட்டிருப்பே இல்லே?"

"ஆமாம்."

"அப்ப நீ போகாம உன் பிரயாணத்தை நிறுத்தினது, இந்த ஐயா காரணம் இல்லே. உன் பழி வாங்கற வெறிதான் காரணம். இல்லையா?"

"ஐயா..."

"நீ இன்னிக்கு ஒரு பெரிய டாக்டரா இருக்கிறதுக்கு யார் காரணம்னு நான் என் மார்பு தட்டிக் கேட்கலே... அப்படிக்கேட்டுட்டா அப்புறம்நான் இதுவரை செஞ்சதுக்கெல்லாம் அர்த்தம் இல்லாமல் போயிடும். கேவலம் ஒரு சின்ன விஷயத்துக்காக, ஒரு பரிசுத்தமான பெண்ணை ஏமாத்திட்டு, அதைப் பெரிய ஜயிப்பா நினைச்சு என்கிட்டே வந்து சொல்றியே, இனிமே என் மனசிலே உனக்கு எப்படி இடம் இருக்கும்னு நினைக்கிறே?"

நல்லசிவம் திண்டாடிப் போனான்.

சபாபதி தொடர்ந்தார்.

"உன் மனசிலே அரேபியா போகணும்னு இருக்கு. இல்லாமப் போனா என்கிட்டே சொல்லாமலே அப்ளிகேஷன் போட்டிருக்க மாட்டே. அவகூடப் போறதுன்னு இந்த உண்மை தெரியாதவரைக்கும் முடிவு செய்திருந்தே... ஆனா அந்த முடிவை இன்னிக்கு நீ மாத்திட்டதாலே பாதிக்கப்பட்டவள் அந்தப் பெண் மட்டும்தான்னு நினைக்காதே! நானும்தான் பாதிக்கப்பட்டிருக்கேன். ஏன்னா, நீ உன் பிரயாணத்தை ரத்து செய்ய நான் காரணம் இல்லே... என் கெஞ்சல்கள் காரணம் இல்லே... நீ திரும்பி வரதுக்குள்ளே நான் போயிடுவேன். உன் கையாலே எனக்குக் கொள்ளி கிடைக்காதுன்னு நான் உங்கிட்ட புலம்பினேனே, அந்தப் புலம்பல் காரணம் இல்லே..... அது காரணம் இல்லே... நான் உனக்கு உபயோகமா இருந்தேன். இல்லே. நீ என்னை உன் இஷ்டத்துக்கு உபயோகிச்சுக்கிட்டே... நீ பெரிய டாக்டர். ஒத்துக்கறேன். தொழில்லே கடமை உணர்ச்சி இருக்கு... பாராட்டறேன்...ஆனா நீ மனிதன் இல்லே... உனக்கு மனிதாபிமானம் இல்லே...." அவருக்கு மூச்சு வாங்கியது. இருமினார்.

அவருடைய நீண்ட நேர இருமல் அடங்கும் வரை காத்திருந்த நல்லசிவம் பேச வாய் திறந்தான். ஆனால் அவர் கை அமர்த்தி அடக்கினார்.

"நீ எதுவும் இனிமேல் பேச வேண்டாம். நீ எப்படி இந்த வீட்டுக்குள் வந்தாயோ அப்படியே போய்விடு. இன்னும் கால் மணி நேரம் அவகாசம் தருகிறேன். நீ இந்த வீட்டிலிருந்து எதுவும் எடுத்துக் கொண்டு போகக் கூடாது. உம் போ!"

நல்லசிவம் ஒரு சிலையாக நின்றான்.

"ஐயா!"

"எனக்கும் இங்கிலீஷ் தெரியும். அந்தப் பாஷையிலே பேசினாத்தான் நீ புரிஞ்சுப்பே.. யூ கெட் அவுட்!"

லில்லி படுக்கையில் குப்புறப் படுத்துக் கொண்டு அழுதாள். அம்மணி புறப்பட்டுச் செல்லும்வரை மன உறுதியைத் தளர விடாதிருந்த அவள், டாக்சி புறப்பட்டுச் செல்வதைக் கண்டதுமே, தன்னை விட்டுத் தன்னிடமுள்ள ஒரு பாதி பிரிந்து போவதாகப் பட்டது. அறைக்குத் திரும்பி வந்தவளுக்கு டீ குடிக்க வேண்டும் என்று தோன்றவில்லை. பிரத்யேகமான சிகரெட்டை இழுக்க வேண்டும் என்ற எண்ணம் ஏற்படவில்லை.

அறை வெறிச்சோடியது.

அம்மணி அவளைச் சுற்றிச் சுற்றி வந்தாள். அம்மணியின் நெற்றிக் குங்குமம் அவளுடைய நெற்றியில் பதிந்தது.

அம்மணியின் அமைதியான சிரிப்பு அவளுடைய உதடுகளில் உறைந்தது.

லில்லியின் இதயத்திலிருந்து அம்மணியின் குரல் எழுந்தது.

கேவ ஆரம்பித்தவள் விம்மினாள்.

விம்மினவள் அழலானாள்.

திடீரென்று கதவு தட்டும் ஓசை.

யார்?

அம்மணியா?

அவள் திரும்பி வந்து விட்டாளா?

கடிகாரத்தைப் பார்த்தாள்.

ஒன்பதரை.

---

## அடுத்த வாரம்:

# ON THE SPOT

## Report from srilanka



இலங்கை சென்றுள்ள திரைப்படக் குழுவினர் அனுபவங்கள்

சலன் எழுதுகிறார்



# That old faithful has many more miles to go– with a new P4 Vehicle Engine



India's Most Trusted Diesel Engine

Lend a fresh lease of life to your old petrol vehicle — fit a P4 diesel engine. This well proven and popular prime mover will help to keep your vehicle profitably on the road for many more years at operating costs lower than ever before.

Engineered for economy and dependability, Simpsons P4 engine has gained wide user acceptance as original equipment and for repowering light commercial vehicles.

Simpsons nation-wide dealer network makes sure that all your parts and service requirements are met promptly and efficiently.

Simpsons for the horse power you need

Simpson & Co. Ltd

861/862, Anna Salai, Madras-600 002.

உங்களைப்
போன்றவர்களை திருப்தி
செய்ய சார்மினாரால்தான்
முடியும்




சற்றே இளைப்பாற! சார்மினாருக்கு இணையுண்டோ

1 ரூபாய்க்கு 10*

* அதிகபட்ச விலை. தலவரிகளைப் பொறுத்தது.

சட்டபூர்வமான எச்சரிக்கை சிகரெட் குடித்தல் உடல் நலத்திற்குத் தீங்கானது

STATUTORY WARNING CIGARETTE SMOKING IS INJURIOUS TO HEALTH

CASVS-238-203 TAM

பிரதான விற்பனையாளர்: மெஸர்ஸ் ஆர். குமார் & பிரதர்ஸ் நெய்வேலி-607 803

இரவு ஒன்பதரை மணிக்கு அம்மணியால் எப்படித் திரும்பி வர முடியும்? அவன் திரும்பி வர இன்னும் மூன்று ஆண்டுகள் இருக்கின்றனவே?

அவள் மெதுவாக எழுந்து நடந்து கதவைத் திறந்தாள்.

டாக்டர் நல்லசிவம்!

வெளிச்சத்தில் லில்லி அவனை ஏறிட்டுப் பார்த்தாள்.

இரத்தமின்றி வெளிறிய முகம். கண்கள் உயிரற்று இரு கோலி உருண்டைகளாகத் தோன்றின.

''டாக்டர்!''

''உள்ளே வரலாமா லில்லி?''

''நீங்க... நீங்க....''

''போகவில்லே.''

''அம்மணி?''

''போயிட்டாள்!''

''அப்ப....?''

''லில்லி... என்னை ஏதும் கேட்காதே... என்னை வளர்த்த அப்பன்கூட என்னை விரட்டி அடிச்சுட்டார்!''

''நான் ஒரு நர்ஸ். சாதாரண நர்ஸ்... நீங்க ஒரு டாக்டர். பெரிய டாக்டர். ஏன் என் கிட்ட வந்து இதையெல்லாம் சொல்றீங்க? ஏன் அம்மணியைத் தவிக்க விட்டுட்டு இங்கே வந்து நிக்கறீங்க....''

''ஒரு நல்ல டாக்டருக்கு ஒரு நல்ல இதயமும் வேண்டும் லில்லி. அது இங்கே இல்லே!'' நல்லசிவம் தனது வலது கையால் இடது மார்பைத் தொட்டுப் பேசினார்.

''இப்ப எதுக்கு இங்கே வந்திருக்கீங்க, டாக்டர்?''

''நல்லசிவம்னு கூப்பிடு.''

''ஸாரி, என்னைப் பொறுத்த வரையில் நீங்க ஒரு டாக்டர்தான். எதுக்கு இங்கே இந்த வேளையில் வந்திருக்கீங்க?''

''ஆறுதல், அனுதாபம்.''

''புரியவில்லே, டாக்டர்.''

''நான் ஒரே சமயத்தில் இரண்டு பேர்களை ஏமாற்றிவிட்டேன். ஒருத்தியை என் செய்கையால். ஒருவரை என்னுடைய மனசால். அம்மணியாவது என்னை மன்னிக்கலாம். ஆனால் என் 'ஐயா' என்னை மன்னிக்கவில்லே.''

''இப்ப நான் என்ன செய்ய வேண்டும்?''

''என் பெட்டியை நான் ஒரு ஓட்டல் ரூமில் போட்டு விட்டு வந்திருக்கிறேன், லில்லி!''

''அதற்கு என்ன?''

''இன்று இரவு பூரா என்னால் தூங்க முடியாது....''

திடீரென்று லில்லிக்கு அவனைப் புரிந்தது. ஆண்களின் கண்களைப் பார்த்துப் பார்த்துப் பழகிய அவளால் எவனையும் எளிதாகப் புரிந்து கொள்ள முடியும். புரிந்துகொண்டாள்.

புரிந்து கொண்டதும் எரிச்சல் பிறந்தது.

''நான் வந்து தாலாட்டுப் பாட வேண்டும் என்கிறீர்களா, டாக்டர்?''

''லில்லி! தன்னைத் தானே மறக்க ஒவ்வொருவர் ஒவ்வொரு வழியைத் தேடுகிறார்கள். எனக்கு இதுவரையில் எந்தப் பழக்கமும் இல்லே...''

''இன்னிக்கு-ஆரம்ப விழா நடத்தலாம்னு என்னை அழைக்கிறீர்களா டாக்டர்!''



''ஐ வாண்ட் யுவர் கம்பெனி...''

''இட் மீன்ஸ்....''

''யெஸ்... யெஸ்.... லில்லி...ப்ளீஸ் யூ வில் பி மை ஃபர்ஸ்ட்....''

''ஐ ஸே யூ கெட் அவுட்... ஐ சூஸ் மை மென்... நோபடி கேன் பிக் மி ஜஸ்ட் லைக் தட்... கிளியர் அவுட்... ஆர் ஐ வில் ரிப்போர்ட் டு...''

அவள் முடிக்கவில்லே. அவன் நீண்ட வராந்தாவில் நடக்க ஆரம்பித்து விட்டான்.

கதவை அறைந்து சாத்தினாள். கட்டிலில் உட்கார்ந்தாள்.

அப்போது?

அம்மணி தனியாக விமானம் ஏறி இருக்கிறாள்! கடைசி நிமிஷத்தில் ஒரு புழு அவளைக் கடித்துக் காலை வாரி விட்டிருக்கிறது.

அவளுடைய கோபத்தில் அவளுடைய அழுகை எப்போதோ வறண்டு விட்டது.

அம்மணி!

ஒரு ஃபூல்!

ஒரு ஸ்டுபிட் கேர்ள்!

காதல்!

லவ்!

மோசடி வார்த்தை!

அர்த்தமில்லாத வார்த்தை!

தேர் இஸ் நோ லவ் இன் திஸ் வேர்ல்ட்.

தேர் இஸ் ஒன்லி எ பெட். எ பெட்!

எ உமன்.

எ மேன்.

லவ்....! ஷிட்!

லில்லி கட்டிலை விட்டு எழுந்தாள். டிரஸ் மாற்றிக் கொண்டாள்.

ஷியாம் என்று ஒருவனை அவளுக்குத் தெரியும். டெலிபோன் நம்பரைக் கொடுத்திருந்தான். பெஸண்ட் நகரில் ஒரு ஃப்ளாட்டில் தனியாக இருக்கிறான்.

கடகடவென்று கீழே போனாள். டெலிபோன்.

ஷியாம். ரெடி. அவனே காரை எடுத்துக் கொண்டு வருகிறான்.

அம்மணி — கோ டு ஹெல்!

நல்லசிவம் — கோ டு ஹெல்!

டுடேஸ் ஹீரோ இஸ் ஷியாம்!

(தொடரும்)

# இசைச் சந்திப்பு



அண்ணாமலை பல்கலைக் கழகத்தில், பொருளாதாரத்தில் எம். ஏ. பட்டம் பெற்று, சென்னை நிர்லான் சிந்தடிக் நிறுவனத்தின் தென்பிராந்திய அதிகாரியாக இருக்கும் திரு வி. சுப்பிரமணியம், கர்நாடக இசை உலகில் ரசிகர்களுக்கு நன்கு பரிச்சயமானவர்.

அவரது செயின்ட் மேரீஸ் சாலை இல்லத்தில் மழை முற்றும் நிற்காத ஒரு மாலை வேளையில், அவருடன் இந்தப் பேட்டி நடைபெற்றது. அழகாக அமைக்கப்பட்டிருந்த விஸ்தாரமான வரவேற்பறையில், பிரதானமாகத் தென்பட்டது— கழுத்து வரையிலான அம்பாளின் சிலை. அதன் சிரசில் செக்கச் செவேலென்று ஒரு செம்பருத்திப் பூவும் வைக்கப்பட்டிருந்தது...

"உங்களுக்கு இசையில் ஆர்வம் ஏற்பட்டது எப்படி? திரு செம்மங்குடி அவர்களை உங்கள் குருவாக ஏற்றுக் கொள்ள ஏதேனும் காரணம் உண்டா?" என்ற கேள்வியுடன் பேட்டியை ஆரம்பிக்கிறோம்.

"எனக்கு மூன்று வயதாயிருக்கும்போது, திருவனந்தபுரம் அரண்மனையில் ஒரு திருமண நிகழ்ச்சிக்கு செம்மங்குடி அவர்களின் கச்சேரி நடைபெற்றது. ஐந்து வயதுக்குக் கீழேயுள்ள குழந்தைகள் அரண்மனைக்குள் அனுமதிக்கப் படுவதில்லை. ஆனால் எப்படியோ என் தாயார் என்னை உள்ளே 'கடத்திக்கொண்டு' போய்விட்டார்கள். அன்றே அந்தக் கச்சேரியை ரசித்துக் கேட்டேன்..."

"மூன்று வயதில்?"

"ஆமாம். அந்த வயதிலேயே ராகங்களைக் கண்டுபிடிப்பேன் என்று என் பெற்றோர்கள் கூறுவார்கள்! திருவனந்தபுரம் ஸ்வாதித் திருநாள் இசைக் கல்லூரிப் பேராசிரியர் திரு எஸ். சங்கரய்யரிடம் 1951ல் இசை கற்க ஆரம்பித்தேன். என்னுடைய முதல் மேடைக் கச்சேரி, பயிலத் தொடங்கிய பதினெட்டாவது மாதத்திலேயே — அதாவது 1953லேயே நடைபெற்றது. 1956லிருந்து தான் ஸ்ரீ செம்மங்குடி அவர்களிடம் சீடனாக வந்தேன். அப்போது திருவனந்தபுரம் இசைக் கல்லூரியில் அவர்தான் முதல்வர். எம்.ஏ. பாஸ் செய்துவிட்டு வீட்டில் இருந்த சமயம் அது. கல்லூரியில் ஒரு கச்சேரி பண்ணச் சொல்லிக் கேட்டார். பாட்டைக் கேட்ட பிறகு, சீடனாகச் சேரும்படி சொன்னார். அதைப் பெரும் பேறாகக் கருதி, உடனே அவரிடம் மாணாக்கனாகச் சேர்ந்தேன்."

"1958ல் திரு செம்மங்குடி சென்னைக்கு வந்துவிட்டாரில்லையா?"

"ஆமாம். அப்போது நானும் இங்கேயே வந்துவிட்டேன். அதனால் தொடர்ந்து அவரிடம் இசை பயில முடிந்தது."

"இதுவரை எத்தனை தனிக் கச்சேரிகள் செய்திருப்பீர்கள்? திரு செம்மங்குடி அவர்களுடன் பாடுவது தவிர?" என்று கேட்டபோது—

"கிட்டத்தட்ட இருநூறு இருக்கலாம்" என்று தெரிவித்தார் சுப்பிரமணியம்.

"இவை நான் செய்த ரேடியோ கச்சேரிகளையும் சேர்த்துத்தான். இந்த எண்ணிக்கை குறைவாகத் தோன்றினால், பாட்டு என் முழு நேரத் தொழில் அல்ல என்பது ஒரு காரணம். அப்படியானால் இசை மூலம் கிடைக்கும் வருவாயை என்ன செய்வீர்கள் என்று நீங்கள் கேட்கலாம். நான் எந்த மேடைக் கச்சேரிக்கும் ஒரு காசும் பெற்றுக்கொண்டதில்லை. வானொலியில் தரும் சன்மானத்தை அப்படியே குருவாயூர் கோயிலுக்கு அனுப்பி வைத்து விடுவேன்!"

"சிஷ்யர்களை ஊக்குவிப்பதில் உங்கள் குரு எப்படி?" என்று அடுத்த கேள்வியை முடிக்கு முன்னரே, பளிச்சென்று "இவரைப் போல் சீடர்களுக்கு ஊக்கம் அளித்த குருநாதர் யாரும் இருக்க முடியாது என்பது என் அபிப்பிராயம். அந்த வகையிலும் இவர் நெம்பர் ஒன் என்று சொல்லலாம்" என்றார் சுப்பிரமணியம் பெருமிதத்துடன்.

கர்நாடக சங்கீதத்தின் இன்றைய நிலை பற்றி உங்கள் கருத்தைச் சொல்லுங்களேன் என்று கேட்டுக் கொண்டோம்.

"முன்பெல்லாம் அரியக்குடி அவர்களோ செம்மங்குடி அவர்களோ ஒரு ராகத்தைப் பாடினால் பத்து நாளைக்கு அது உங்கள் மனசை விட்டு அகலாமல் அப்படியே வருடிக் கொண்டிருக்கும். 1930களில் கர்நாடக இசையில் முதிர்ச்சியும் பரிமளிப்பும் பளிரென்று தெரிந்தன. கச்சேரிக்குக் கச்சேரி, இவை இன்னும் உயர் நிலைக்குப் போயின. இப்போது அப்படி இருப்பதாக எனக்குப் படவில்லை. கர்நாடக இசையை மக்கள் எல்லோரும் ரசித்து அனுபவிக்க வேண்டும் என்பதற்காக வெகு லேசானதாக (lighter) ஆக்கிவிட்டார்கள் இப்போது."

இதை அவர் சொல்லும்போது குறுக்கிட்டு, "அப்படியானால் மக்கள் ரசிக்கக் கூடியவாறு பாடுவது தவறு என்று சொல்கிறீர்களா?" என்று கேட்ட போது—

"ரசிகர்களைத் திருப்திப்படுத்த, புதிதாக எதையாவது பண்ண வேண்டும் என்று செய்கிறார்கள். ரசிகர்களுக்கோ, பாடகர் என்ன செய்கிறார் என்றே புரிவதில்லை. ஸ்வரம் பாடும்பொழுது இசையின் தரம் பாழாகாமல், ராகத்தின் பாவம் கெடாமல் பாட வேண்டும் என்பது என் கொள்கை."

"கொஞ்சம் விளக்கமாகச் சொல்லுங்களேன்" என்று கேட்டுக் கொண்டதற்கு—

"வித்துவான்கள் ராக ஆலாபனை, ஸ்வர ப்ரஸ்தாரம் முதலிய வற்றைச் செய்கையில் புதிய முயற்சிகளைக் கையாளும்போது, வெறும் ஸ்வரக் கோவைகள் மட்டுமே ராகங்களாவதில்லை என்ற தத்துவத்தை உணர வேண்டும். ஸ்வரக் கோவைகளை அலங்காரப்படுத்துவதில் அதிகமாகக் கவனம் செலுத்துதல் இரண்டாம் பட்சமே. ராக பாவம்தான் இசையின் உயிர்நாடி. அதுவே முதன்மையானது. சங்கீத சாஸ்திர விதிகளுக்கு உட்பட்டே எத்தனையோ அலங்காரங்களையும் அழகுகளையும் இசைக்கு நாம் வழங்க முடியும்.

"நான் பணிபுரியும் கம்பெனியில், கிரிக்கெட்டுக்காகவே காவஸ்கர், காவ்ரி, சந்தீப் பாட்டீல் எல்லோருக்கும் வேலை கொடுத்திருக்கிறார்கள். அது போல, தனியார் மற்றும் பொதுத் தொழில் நிறுவனங்களில் கர்நாடக இசைப் புலமை வாய்ந்தவர்களை அவர்களுடைய இசைக்காகவே உத்யோகம் அளிக்கத் தொழிலதிபர்களும் அரசும் முன் வரவேண்டும்" என்கிறார் சுப்ரமணியம்.

பேட்டி முடிகிறபோது, ஸ்ரீமதி கிருபா சுப்ரமணியத்திடம், "உங்கள் கணவரின் இசையுலக வாழ்க்கை பற்றி ஏதாவது சொல்லுங்களேன்?" என்று கேட்டபோது—

"கர்நாடக சங்கீதத்துக்கு என்று உள்ள கட்டுப்பாட்டுக்குள் அடங்கி, தனக்குத் தெரிந்ததை ஒரு நிர்ணயத்துடன் பாட வேண்டும். இசையில் முன்னேற்றம் தேவைதான் — அதற்காக சம்பிரதாயத்தை மறந்துவிடக்கூடாது. காலத்தை வென்று கலை நிற்க வேண்டும் என்பதில் உறுதியுடன் இருக்கிறார் இவர். இன்றும், ஊரில் இருக்கிற நாளில் காலை ஆறு மணிக்கு திரு செம்மங்குடி அவர்களிடம் இசை பயிலச் செல்கிறார். செம்மங்குடி அவர்கள் 55 வருடங்களாகத் தம்மோடு வைத்திருந்த தம்புராவை இவருக்கு அன்பளிப்பாகக் கொடுத்திருக்கிறார்.

"இவர் இத்துறையில் பெயர் எடுக்க சிருங்கேரி ஆசார்யார், இவர் குருநாதர் — இருவரது அநுக்கிரகமே காரணம் என்பேன்!" என்றார்.

பேட்டி: **சாருகேசி**



# வசிஷ்டர் வாயால்...

**வி**சுவசாந்தி விசு. நாடக உலகில் கோலோச்சிய இவருக்குத் திரைஉலகம் அடுத்தடுத்து வரவேற்புப் பத்திரங்கள் கொடுத்துக் கொண்டிருக்கிறது. பாலசந்தர் என்ற திரைப் படக் கல்லூரியில் ஆத்மார்த்த மாணவனாக விசு சேர்த்துக் கொள்ளப் பட்டிருக்கிறார். நாடக உலகில் மிகப் பிரபலமாவதற்கு முன் பல டிராவலர் கம்பெனிகளில் பணியாற்றியுள்ளார் விசு. ஒரு கட்டத்தில் இவரால் நாடகங்களை நிம்மதியாக எழுத முடியவில்லை. ஆபீசில் வேலையையும் ஒழுங்காகச் செய்ய முடியவில்லை. எனவே பெரிய உத்தியோகத்தை ராஜிநாமாச் செய்துவிட்டு வேறு ஒரு டிராவல் கம்பெனியில் பொறுப்புக்கள் அதிகம் இல்லாத சிறிய உத்தியோகத்தை ஏற்றார். ஆனாலும் என்ன, இவர் திறமை காரணமாகப் பதவி உயர்ந்தது; பொறுப்பும் மிகுந்தது. மறுபடியும் அதே இக்கட்டான நிலை. வேலைக்கு முழுக்குப் போடுகிற தருணத்தில் டைரக்டர் கே. பாலசந்தரிடமிருந்து மழலைப் பட்டாளம் திரைக் கதை வசனம் உருவாக்குமாறு அழைப்பு வந்தது. சினிமாவில் புகுந்தாலும் நாடக மேடையை மறவாமல் புதிய நாடகங்களை அரங்கேற்றி வருகிறார் விசு. உடன் நடிப்பவர்களில் பலர் உறவினர்களே. சகோதரர் ராஜாமணி, மற்றொரு சகோதரர் கிருஷ்ணமூர்த்தி, கடைக்குட்டி சகோதரர் நரசிம்மன், மைத்துனர் ரங்கா எல்லோரும் விசுவசாந்தி குடும்பத்தைச் சேர்ந்தவர்கள்.

பல வெற்றி நாடகங்களை அரங்கேற்றிய விசு தோல்வியைத் தழுவியது காத்தாடிக்காக எழுதிய "சத்தியவான் — சாவித்திரி" மேடை ஏறியபோது. இந்த நாடகத்தில் சத்தியவான் சாவதில்லை. மாறாக சாவித்திரி இறக்கிறாள். ஆனால் சாவித்திரி, தான் வாழ யமனிடம் மடிப் பிச்சை கேட்கிறாள். யமனும் மூன்று மாத காலம் உயிர் தரிக்க சாவித்திரிக்கு வரம் தருகிறார். ஜனங்கள் இதை ஒரு கேலிக் கூத்தாக எண்ணினார்கள்.

திடீரென்று ஒரு நாள் பாலசந்தரிடமிருந்து இவருக்கு அழைப்பு வந்தது. "கட்டா மிட்டா" இந்திப் படத்தை "மழலைப் பட்டாளம்" என்ற பெயரில் அவரது கலைக்கூடம் சினிமாக் கம்பெனி எடுக்கப் போகிறது. நடிகை லட்சுமி டைரக்ஷன். கதை வசனம் எழுதுமாறு விசுவுக்கு உத்தரவு பிறந்தது. உத்தியோகத்தை ராஜிநாமாச் செய்து விட்டு பூஜைக்கு தேங்காய்வாங்குவது முதல் சென்ஸார் போர்டு போவது வரை எல்லாப் பணிகளிலும் இவர் பாலச்சந்தர் விருப்பப்படி ஈடுபட்டார். விசு திரைக் கதை வசனம் எழுதிய முக்தா பிலிம்ஸ் "அவன் அவள் அது" அண்மையில் நூறாவது நாளைக் கொண்டாடியது.

"குடும்பம் ஒரு கதம்பம்" நூறாவது நாள் நாடக விழாவில் பேசிய பாலசந்தர், இவருடைய ஒவ்வொரு நாடகத்திலும் ரசிகர்களுக்குச் சொல்ல ஏதோ ஒரு கருத்தை வைத்திருப்பதாகக் கூறியபோது வசிஷ்டர் வாயால் பிரும்மரிஷி ஆனார்.

பேட்டி: டி. எம். ஆர்.

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431543) Editor: K. Rajendran

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

# வாழ்த்துக்கள்!








बैंक ऑफ़ बड़ौदा

**Bank of Baroda**

(Head Office: Mandvi, Baroda)

माँग या आदेश पर

ON DEMAND PAY TO

RUPEES FIFTYONE ONLY.

PAYABLE AT PAR AT ALL BRANCHES OF

OR ORDER

MANAGER

## பாங்க் ஆஃப் பரோடா கிஃப்ட் செக் புதுமையான வாழ்த்து!

### அன்பளிப்புகளைத் தேர்ந்தெடுப்பதை விட மிக வசதியானது. பணமாக அளிப்பதைவிட மிகப் பாங்கானது.

பாங்க் ஆஃப் பரோடாவின் எந்தக் கிளைக்கு வேண்டுமானாலும் வாருங்கள். விசேஷமான கிஃப்ட் செக்கைப் பெற்றுக் கொள்ளுங்கள். திருமணம், பிறந்தநாள் மற்றும் சிறப்பு நிகழ்ச்சிகளில் நீங்கள் அன்பளிப்பாக வழங்க, ரூ. 101, ரூ. 51, ரூ. 21 மற்றும் ரூ.11 ஆகிய மதிப்பினங்களில் இந்தச் செக் கிடைக்கிறது. இதனைப் பெறுவோர் (பாங்க் ஆஃப் பரோடாவில் அவர் கணக்கு வைத்திருக்கும் அவசியமில்லை) இந்தச் செக்கை எந்தக் கிளையிலும் பணமாக்கலாம் அல்லது எந்த ஒரு பாங்கிலும் தம் கணக்கில் போடலாம்.

**பாங்க் ஆஃப் பரோடா கிஃப்ட் செக்—புதுமையான வாழ்த்து!**



**பாங்க் ஆஃப் பரோடா**

(இந்திய அரசுக்குச் சொந்தமானது)

ULKA/BOB/GC-2-TAM